Regd. M. No. 5384 Phone No. 2184

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(காலைப் பதிப்பு)








மலர் 16 இதழ் 88] சென்னை 15-11-59 விகாரி ஐப்பசி 29வ ஞாயிற்றுக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்


# விலைவாசிக் குறைப்புக் கிளர்ச்சி வாரம்

# நவம்பர் 15 முதல் 22 வரை

## வெற்றிகரமாகக் கொண்டாடுக



## உணவு விலையைக் கட்டுப்படுத்த மதுரை கலெக்டரிடம் மகஜர்

### கம்யூனிஸ்ட் கட்சி சமர்ப்பித்தது

மதுரை, நவ. 12—

11-11-59 அன்று மதுரை நகர கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில், நகர கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் தோழர்கள் ஏ. பி. பழனிச்சாமி, எஸ். குருசாமி, எம். என். ஆதிநாராயணன் ஆகியவர்கள் மதுரை ஜில்லா கலெக்டரைச் சந்தித்து, சாதாரண நடுத்தர மக்களுக்குக் காப்பி, டீக்கடை வைத்து வாழ்க்கை நடத்துபவர்களுக்கும் நிர்ணயித்த விலையில் சீனி கிடைக்கவில்லை என்பதை எடுத்துக் கூறினார்கள். நியாய விலைக் கடைகளில் அரிசி சரியாகக் கிடைக்கவில்லை என்றும் தெரிவித்தார்கள்.

கலெக்டர் எல்லாவற்றையும் கவனித்து நடவடிக்கை எடுப்பதாக வாக்குறுதி யளித்தார்.

பிறகு மதுரை நகர கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் மகஜர் ஒன்றை சமர்ப்பித்தனர்.

### உணவு விலைவாசி குறைப்பு இயக்க வாரம்

## செயற்குழு அறிவிப்பு

நவம்பர் 15-ந்தேதியிலிருந்து 22 தேதி முடியவரும் ஒரு வாரமும் உணவு விலைவாசிக் குறைப்புக்கான, ஜனநாயக சக்திகளின் பரிபூரண அணிவகுப்பு ஆர்ப்பாட்ட வாரம் ஒவ்வொரு மட்டத்திலும் கம்யூனிஸ்ட் கட்சியின் கமிட்டிகள் முன் கையெடுத்து சகல பகுதி மக்களையும் திரட்டுவதற்கும், கூட்டங்கள், ஊர்வலங்கள் இதுவரை தமிழகம் கண்டிராத வகையில் நடத்துவதற்கும், சகல முயற்சிகளையும் செய்யும்படி கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள். உணவு விலைக் குறைப்பு என்ற ஒரே நோக்கத்துடன் பல்வேறு கட்சிகளும் ஸ்தாபனங்களும் சேர்ந்து நடத்தும் கூட்டு இயக்கம் என்பதை ஞாபகத்தில் கொண்டு, இந்த முக்கியமான பிரச்சினையில் உருவாகியுள்ள ஒற்றுமை உணர்வைப் பலப்படுத்தும் வகையில், மிகப்பொறுப்புடன் செயல் படும்படியும் கட்சிக் கமிட்டிகளுக்கும் ஞாபகமூட்ட விரும்புகிறோம்.

சென்னை, 14—11—59 } செயற்குழு, தமிழ் மாகாண கவுன்சில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.

## சர்வகட்சிக் கமிட்டியின் வேண்டுகோள்

சென்னை, நவ. 14—

**சர்வகட்சி விலைவாசிக் குறைப்புக் கமிட்டியின் சார்பில் விலைவாசிக் குறைப்பு வாரம் சம்பந்தமாக வெளியிடப்பட்டுள்ள அறிக்கையைக் கீழே தருகிறோம். இந்த வாரத்தை வெற்றிகரமாகக் கொண்டாடும்படியும் இந்த இயக்கம் மாநில முற்றிலுமுள்ள மக்களின் ஐக்கிய அணிவகுப்பாகத் திகழ வேண்டும் எனவும் இக்கமிட்டி வேண்டுகோள் விடுத்துள்ளது.**

விலைவாசிக் குறைப்பு சர்வகட்சி (தமிழ்நாடு) கமிட்டியின் வேண்டுகோளுக்கிணங்க, நவம்பர் 15 முதல் நவம்பர் 22 வரை விலைவாசிக் குறைப்புக் கிளர்ச்சி ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும் நடைபெற விருக்கின்றன.

தமிழ் மாநிலம் முழுவதும், ஒவ்வொரு மாவட்டத்திலும், ஆங்காங்கு ஏற்பட்டுள்ள சர்வ கட்சிக் கமிட்டிகளின் ஆதரவில் இந்த விலைவாசிக் குறைப்புவாரம் நடத்தப்படுகிறது.

இந்தக் கூட்டங்களில், விலைவாசிக் குறைப்புக்காக சர்வகட்சிக் கமிட்டி, அரசாங்கத்தின் முன் வைத்துள்ள ஆலோசனைகள், மக்களுக்கு எடுத்து விளக்கப்படும். இந்த ஆலோசனைகள் 12-10-59ந் தேதியிலேயே ராஜ்ய முதலமைச்சருக்கும் உணவமைச்சருக்கும் சமர்ப்பிக்கப்பட்டிருந்தும் அரசாங்கம் அசையாதிருக்கிறது. இதற்கு மாறாக அரசாங்கத்தின் போக்கு விலைவாசிகளை நாளுக்கு நாள் உயர்த்திக் கொண்டே போவதாக இருக்கிறதே தவிரக் கட்டுப்படுத்துவதாக இல்லை.

மக்களின் மகத்தான கிளர்ச்சி சர்க்காரின் கொள்கைகளில் ஒது மாற்றத்தைக் கொண்டு வருவது முற்றிலும் சாத்தியமென்று நம்புறோம். பொறுப்புணர்ச்சியுடனும், கட்டுப்பாட்டுடனும், மக்களின் மகத்தான அணிவகுப்பைத் திரட்டும் மாபெரும் இயக்கமாக இந்த ஒன்றுபட்ட முயற்சி நிச்சயம் திகழுமென்று திடமாக நம்புகிறோம்.

இந்த நன் முயற்சிக்குத் தமிழ் மக்களின் பேராதரவைக் கோருகிறோம். கூட்டங்களுக்கு ஏராளமாக வந்து ஆதரித்தும் செலவுகளுக்கு நிதி உதவியளித்தும், மக்களின் விருப்பம் வெற்றி காண்பதை உறுதிப்படுத்தக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

நவம்பர் 22-ம் நாள் நடைபெறும் கடைசிநாள் ஊர்வலத்திலும் பொதுக்கூட்டத்திலும் விசேஷமாகப் பங்கு கொண்டு சிறப்பிக்கப் பணிவன்புடன் பொதுமக்களனைவரையும் வேண்டிக் கொள்கிறோம்.

என். வி. நடராஜன்
(தி. மு. க.)

எம். ஆர். வெங்கட்ராமன்
(கம்யூனிஸ்ட் கட்சி)

வி. கண்ணப்பன்
(த. நா. சோஷலிஸ்ட் கட்சி)

கா. மு. ஷெரீப்
(தமிழரசுக் கழகம்)

எஸ். கிருஷ்ணமூர்த்தி
(வழக்கறிஞர், நகரசபை உறுப்பினர்)

சென்னை 13-11-59 | கூட்டுக் கன்வீனர்கள் விலைவாசி குறைப்பு சர்வகட்சிக் கமிட்டி.




குழந்தைகள் தின தபால்தலை. நவம்பர் 14-ந் தேதி வெளியிடப்பட்டது.

## 10 இந்தியப் போலீசாரை சீனு இந்தியா வசம் ஒப்படைத்தது

### கொல்லப்பட்டவர்களின் சடலங்களும் தரப்பட்டன

### இறந்ததாகக் கூறப்பட்ட கரம்சிங் உயிருடன் திரும்பினர்

ஸ்ரீநகர், நவ. 14—

இந்திய ராணுவத்தினர் பத்து பேரை பே லீஸ் அதிகாரி கரம் சிங் உட்பட இவர்களை சீன ராணுவம், எல்லை இந்திய போலீசிடம் ஹாட்ஸ்பிரிங் என்னுமிடத்தினருகில் இன்று காலை பத்து மணிக்கு ஒப்படைத்தது என்று அதிகாரபூர்வமானச் செய்தி இங்கு கிடைத்துள்ளது.

மேலும் அக்டோபர் 21-ம் தேதி கிழக்கு லடாக்கில் நடைபெற்ற துரதிர்ஷ்டவசமான கைகலப்பில் இறந்துபோன ஒன்பது போலீஸ்காரர்களின் சடலங்களையும் சீன அதிகாரிகள் இந்திய அதிகாரிகள் வசம் ஒப்படைத்தனர். இந்திய போலீசிற்கு தலைமை வகித்துச் சென்ற திரு எஸ் பி. தியாகி பத்துஇந்திய போலீசை ஏற்றுக்கொண்டார் என்றும் அச்செய்தி கூறுகிறது.

புதுடெல்லியிலுள்ள அயல் நாட்டு விவகார மந்திரி காரியாலயம், விடுவிக்கப்பட்டவர்களும், சடலங்களும் ஹாட்ஸ்பிரிங்கை அடைந்ததாக இன்று மாலை அறிவித்தது. விடுவிக்கப்பட்டவர்களில் கரம்சிங் இருப்பதாகவும், இதரர்களின் பெயர் விபரம் அறியப்படவில்லை என்றும் கூறப்படுகிறது.

இந்திய எல்லை போலீஸிற்கு தலைமை தாங்கிய கரம்சிங் பனியினால் சற்று பாதிக்கப்பட்டிருப்பதைத் தவிர நன்றாகவே யிருக்கிறார் என்று இங்கு செய்தி கிடைத்துள்ளது. ஒன்பது சடலங்களும் நாளைக் காலை ராணுவ மரியாதையோடு ஹாட்ஸ்பிரிங்கில் தகனம் செய்யப்படும்.

(பி.டி.ஐ.)

## காங்கிரசுக்கும், பி.சோ. கட்சிக்கும் பதவிப் பேராசை பிடித்துள்ளது

### ஸ்ரீகண்டன் நாயர் தாக்குதல்

திருவனந்தபுரம் நவ. 13—

கேரளத்தில் காங்கிரசுக்கும், பிரஜா-சோஷலிஸ்ட் கட்சிக்கும் பதவிப் பேராசை பிடித்துள்ளது என்று புரட்சி சோஷலிஸ்ட் கட்சியின் (ஆர்.எஸ்.பி.) காரியதரிசி திரு. ஸ்ரீகண்டன் நாயர் இன்று குற்றம் சாட்டினார்.

கேரளத்தில் வரப்போகும் தேர்தல்களில் போட்டியிடுவதற்கு ஆர். எஸ். பிக்கு காங்கிரசும், பி. சோ. கட்சியும் எட்டு ஸ்தானங்கள் கொடுத்தன. ஆனால் ஆர். எஸ். பி. அதை நிராகரித்துவிட்டு, இப்பொழுது தனியாக 20 ஸ்தானங்களில் போட்டியிடுகிறது. ஆர். எஸ். பி.யுடன் ஒரு தேர்தல் உடன்பாட்டுக்கு வருவதற்குக் காங்கிரசும், பி. சோ.வும் உண்மையாகவும், நேர்மையாகவும் என்றும் முயற்சி செய்ததில்லை என்றும் ஸ்ரீகண்டன் நாயர் கூறினார்.

## கட்சிக் கட்டுப்பாட்டை மீறியதற்காக டாங்கே, சார்தேசாய் மிராஜ்கர் கண்டிக்கப்பட்டனர்

மீரத், நவ. 14—

சீன இந்திய எல்லைத் தகராறு சம்பந்தமாகக் கட்சிக் கொள்கைக்கு முரண்பட்ட முறையில் பகிரங்கமாகப் பேசியதின் மூலம் கட்சிக் கட்டுப்பாட்டை மீறியதற்காக தோழர்கள் எஸ். ஏ. டாங்கே, எஸ். ஜி. சார்தேசாய் (மகாராஷ்ட்ர கமிட்டிக் காரியதரிசி), எஸ். எஸ். மிராஜ்கர் ஆகியோரைக் கண்டிக்கும் (Censure) தீர்மானமொன்றை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் இன்று நிறைவேற்றியது.

"இந்தத் தோழர்கள் தங்களுடைய தவறுகளிலிருந்தும், இங்கு செய்யப்பட்ட விமர்சனங்களிலிருந்தும் படிப்பினை கற்றுக் கொண்டு, எதிர்காலத்தில் கட்சியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு நடப்பார்களென்றும், கட்சியை பலப்படுத்துவதற்கு சளைக்காது பணியாற்றுவார்கள் என்றும் தேசியக் கவுன்சில் நம்புகிறது", என்று அத்தீர்மானம் கூறியது.

கட்டுப்பாட்டை மீறிய அதே குற்றத்திற்காகக் கட்சியின் மகாராஷ்டிரக் கமிட்டியையும் தேசியக் கவுன்சில் கண்டித்தது.

## இத்தாலிய வர்த்தக குழு

கொழும்பு, நவ. 14—

இலங்கை-இத்தாலி வர்த்தக அபிவிருத்தி பற்றி விவாதிக்க இத்தாலிய வர்த்தக் குழுவினர் நவம்பர் 20-ந்தேதி இங்கு வந்து சேருவார்கள்.



## மக்மஹோன் கோட்டுக்கு தெற்கில் உள்ளது இந்தியப் பிரதேசம்

### இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தேசியக் கவுன்சில் தீர்மானம்

மீரத், நவ. 14—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் இன்று இந்தியா-சீனா எல்லைப் பிரச்சினை சம்பந்தமாக நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தில் மக்மஹோன் எல்லைக் கோடு சம்பந்தமான இந்திய சர்க்காரின் கொள்கைக்கு ஆதரவு தெரிவித்து, அந்தக் கோட்டிற்குத் தெற்கிலுள்ள பிரதேசம் இந்தியாவின் பகுதியென்றும், அது இந்தியாவிலேயே இருக்க வேண்டுமென்றும் கூறியுள்ளது.

அத்தீர்மானம் மேலும் கூறுவதாவது:

"சீன சர்க்கார் மக்மஹோன் கோட்டை சட்டவிரோதமான எல்லைக்கோடு என்று கூறியது. அதற்குக் காரணம், ரகசிய தஸ்தாவேஜுகளைப் பரிமாறிக் கொண்டதன் அடிப்படையில் அது நிர்ணயிக்கப்பட்டதென்றும் சீனாவின் எத்தகைய மத்திய சர்க்காராலும், எப்பொழுதும் அங்கீகரிக்கப்படவில்லையென்றும் அது கூறியது.

ஆயினும், மக்மஹோன் கோடு ஏற்பட்டது எப்படியிருந்த போதிலும், பல ஆண்டுகளாக அந்தக்கோடு இந்தியாவின் எல்லையாக இருந்து வந்துள்ளது அந்தக் கோட்டின் தெற்கிலுள்ள பிரதேசம் இந்திய நிர்வாகத்தின் கீழ் இருந்து வந்துள்ளது.

'ஆகவே, மக்மஹோன் கோட்டின் தெற்கிலுள்ள பிரதேசம் தற்பொழுது இந்தியாவின் ஒரு பகுதி யென்றும், அது இந்தியாவிலேயே இருக்கவேண்டுமென்றும் தேசியக் கவுன்சில் கருதுகிறது.''

### லடாக் எல்லை பற்றி

லடாக் எல்லைப் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், இந்திய சர்க்கார் சரியான நிலையைக் கடைப்பிடித்துள்ளது. அதாவது இந்தப் பகுதியில் தொன்று தொட்டு இருந்துவரும் எல்லை ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும்.

ஆயினும், மேற்கில் தொன்று தொட்டு இருந்துவரும் எல்லை தெட்டத் தெளிவாக நிர்ணயிக்கப்படாததால், அது இந்தியாவிற்கும், சீனாவிற்குமிடையே சிநேக பூர்வமான பேச்சுவார்த்தைகள் மூலம் தீர்த்துக்கொள்ளப்பட வேண்டும், என்றும் அந்தத் தீர்மானம் கூறியது.

இது சம்பந்தமாகத் தீர்மானம் பிரதமர் நேரு கூறியதை ஆதாரம் காட்டியது. "மேற்கத்திய எல்லை ஒரு சிக்கலான பிரச்சினை...எல்லையைப் பொறுத்த மட்டிலும் அது தெளிவற்றதாக இருந்து வந்துள்ளது. ஏனெனில் மக்மஹோன் கோட்டைப் போல் இந்த எல்லை தெளிவாக இல்லை.''

இந்தப் பிரச்சினையில் தீர்வு காண்பதற்கு எந்த நாடும் எத்தகைய முன் நிபந்தனைகளும் விதிக்கக் கூடாது, என்றும் தீர்மானம் வற்புறுத்தியது.

எல்லைத் தகராறை விரைவில் தீர்த்துக் கொள்ள வேண்டிய அவசியத்தை வற்புறுத்திய தீர்மானம், "எல்லையை சாதாரணமாக நிர்ணயிப்பதில் அரசியல், நிர்வாக யதார்த்த நிலைமைகள் தான் மிகவும் முக்கியமான அம்சம் என்பதைக் கணக்கில் கொண்டால், அத்தகைய தீர்வு சாத்தியம், என்று கூறியது.

கிழக்குப் பகுதியில் எல்லைக் கோடு பரஸ்பரம் ஒத்துக் கொள்ளக் கூடியதாயில்லாதது துரதிர்ஷ்டமானதே. மேற்குப் பகுதியில் அது சரியாக வரையறுக்கப் படவில்லை.

"இந்த நிலைமைகளில், ஒருவர் மீது மற்றொருவர் ஆக்கிரமிப்புக் குற்றச்சாட்டு கொண்டுவருவதும், எதிர்க் குற்றம் சாட்டுவதும் அர்த்தமற்றவையும், தீங்கு விளைவிப்பதுமாகும்'', என்று தீர்மானம் கூறியது.

### இதர கட்சிகளின் போக்கு

இந்தியாவில் ஜனசங், சுதந்திரக் கட்சி, பி சோ. கட்சியின் தலைமை, காங்கிரசுக்குள்ளேயே கொஞ்சம் செல்வாக்குள்ள நபர்கள் ஆகியோர் சீனாவுக்கு எதிராக ஒரு துவேஷப் பிரசாரத்தைக் கிளப்பி வருகின்றனர் என்று தீர்மானம் குற்றஞ் சாட்டியது.

இத்தகைய கட்சிகளின் நடவடிக்கைகளைக் கண்டு மக்கள் உஷாராயிருக்க வேண்டுமென்று தீர்மானம் கேட்டுக் கொண்டது.



## ஆஸ்டிரேலியா பாகிஸ்தான் கிரிக்கெட் போட்டி

டாக்கா, நவ. 14—

ஆஸ்டிரேலியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் இங்கே நடக்கும் கிரிக்கெட் டெஸ்ட் பந்தயத்தில் பாகிஸ்தான் கோஷ்டி முதலில் ஆடி 200 'ரன்'கள் எடுத்தது.

## நேருவுக்கு சூயென்-லாய் வாழ்த்து

### நாடெங்கும் பல இடங்களில் குழந்தைகள் தினக் கொண்டாட்டம்

புதுடில்லி, நவ. 14—

மக்கள் சீனத்தின் பிரதமர் சூஎன்-லாய், பர்மியப் பிரதமர் நீவின், ஐ.நா. பொதுச்செயலாளர் ஹாமர்ஷோல்ட், அதிபர் டிகால், ஸ்விஸ கூட்டாட்சித் தலைவர் பால் கிளாடி, மே. ஜெர்மன் அதிபர் அடினார், ஐனாதிபதி ஹென்ரி லூபே முதலியோர் பிரதமர் நேருவுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்கள் தெரிவித்திருக்கின்றனர்.

சீனப் பிரதமர் சூயென்-லாய் தனது வாழ்த்துச் செய்தியில் கூறியுள்ளதாவது: 'உங்களுடைய 70-வது பிறந்த நாளில் எனது அன்பான வாழ்த்துக்களைத் தெரிவிக்கின்றேன். நல்ல ஆரோக்கியத்துடனும் நெடிய ஆயுளுடனும் வாழ வாழ்த்துகிறேன். இந்தியாவின் சுதந்திரம் சுபிட்சம், வல்லமை ஆகியவற்றுக்கும் சீன இந்திய நேச உறவுக்கும் ஆசிய, உலக சமாதானத்துக்கும், இன்னும் அதிக உற்சாகத்துடன் தொடர்ந்து பாடுபடுவீர்களாக!''

### சென்னை

குழந்தைகள் தின விழா நாடு பூராவும் இன்று கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில் பள்ளிச் சிறுவர்களின் ஆட்டமும், பாட்டும் முக்கிய நிகழ்ச்சியாக இருந்தது.

### கோட்டயம்

கோட்டயத்தில் பள்ளிச் சிறுவர்களின் ஊர்வலமும், விளையாட்டுகளும் நடைபெற்றன. குழந்தைகளின் பூங்காவிற்கு அடிக்கல் நாட்டப்பட்டது.

### மதுரை

30,000த்திற்கு மேற்பட்ட குழந்தைகள் இங்கு தமுக்கம்திடலில் நடைபெற்ற விழாவில் கலந்துகொண்டனர்.

கூட்டு உடற் பயிற்சி செய்து காட்டியும், பாட்டிற்கேற்றபடி நடனமாடியும் உற்சாகமாக கலந்து கொண்டனர். பாட்டு நேருவைப் புகழ்ந்து புனையப்பட்டிருந்தது. குழந்தைகளுக்கு இனிப்பும் வழங்கப்பட்டது. ஆரம்பத்தில் பெரிய ஊர்வலம் நடந்தது. (பி. டி. ஐ.)

## இன்ஷூரன்ஸ் 'பீல்ட்' ஊழியர் உத்தேச வேலைநிறுத்தம் வாபஸ்

புதுடில்லி, நவ. 14—

இந்திய இன்ஷூரன்ஸ் 'பீல்ட்' ஊழியர் தேசிய சம்மேளனத்தின் தேசிய நிர்வாகக் கமிட்டி இங்கு தன்னுடைய மூன்று நாள் கூட்ட இறுதியில், நவ. 16 முதல் நடைபெறுவதாயிருந்த பீல்ட் ஊழியர் வேலை நிறுத்தத்தை வாபஸ் பெறுவதென்று முடிவு செய்தது.

ஊழியர்களின் கோரிக்கைகள் சம்பந்தமாகப் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு சுமுகமான சூழ்நிலையை உண்டாக்குவதற்கே இம்முடிவு எடுக்கப்பட்டதாக மேற்படி நிர்வாகக் கமிட்டியின் அறிக்கை கூறுகிறது. நவம்பர் 5-ல் பீல்ட் ஊழியர்கள் ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்திருந்தனர்,

# எல்லை விஷயத்தைப் பேசித் தீர்க்க வேண்டும்

## கம்யூனிஸ்டு கட்சியில் பிளவு என்போருக்கு தோழர் ராமமூர்த்தி சூடு

### அரசு மானியம் அளித்து குறைந்த விலைக்கு அரிசி விற்க வேண்டும்

பழனி, நவ. 13—

இரவு 7 மணிக்கு சிலாட்டர் ஹவுஸ் மைதானத்தில் தோழர் கே. பெரியசாமி தலைமையில் விலைவாசி உயர்வு எதிர்ப்பு பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு முன்னர் கட்சி ஆபீசில் இருந்து மாபெரும் ஊர்வலம் ஒன்று புறப்பட்டு பிரதான தெருக்களின் வழியாகச் சென்று ஊர்வலத் திடலை அடைந்தது. தோழர் வி. ஏ. கருப்புசாமி பேசியபின், தோழர் பி. ராமமூர்த்தி பலத்த கரகோஷத்திற்கிடையே சுமார் 2½ மணி நேரம் பேசினர்.

#### எல்லை விஷயம்

அவர் பேசும்போது, "இந்திய சீன எல்லை விஷயம் பற்றி நேரு கவலையோடு கவனிக்கிறேன் என்று கூறுகிறார். இதே மாதிரி மாசே-துங்கும் கூறுகிறார். இந்தியசர்க்காரும்,சீனசர்க்காரும்சம சமாகப்பேசி இந்தபிரச்சினையை தீர்க்கவேண்டும் என்று கூறு கிறது. இவர்கள் மட்டுமல்ல, ஆசியாக் கண்ட முழுவதிலும் உள்ள மக்கள் இம் முடிவை எதிர்பார்க்கிருர்கள்.

#### நேரு பேச்சு

"நேரு கல்கத்தாவில் நிருபர்கள் கூட்டத்தில் பேசும்போதே சின்னஞ்சிறு இடங்கள்தான் எல்லைக் கோட்டிற்கு தெற்கே இருக்கிறது என்று கூறினர். இதனைத்தான் சீனுவும் கூறுகிறது. இந்தப்பகுதி ஜனங்கள்வசிக்காத, நடமாட்டமில்லாத இடம். இரண்டாயிரம் ஆண்டுகளாக தகராறு இல்லாத பிரதேசம். காரணம் அங்கு இது வரை எல்லை நிர்ணயிக்கவில்லை யென்று இந்திய, சீன எல்லை அரசாங்கங்களே ஒத்துக்கொள்கின்றன. மக்மஹோன் என்ற ஆங்கிலேயனுல் பொதுவாக எல்லை நிர்ணயிக்கப்பட்டது. ஆனுல் உத்தரவாதப்படுத்தப்பட்டதல்ல. இந்திய சர்க்கார் போட்டுள்ள இந்தியப் படத்தில் எல்லைக்கோடு காட்டப்படவில்லை. காரணம் அப்பிரதேசம் சர்வே செய்யப்படவில்லை என்றும் அதனுல் காட்டப்பட வில்லை என்றும் நேரு கூறுகிருர்.

#### கம்யூனிஸ்ட் கட்சி கூறுவதென்ன?

"கம்யூனிஸ்ட் கட்சி இந்த எல்லைத் தகராறு சம்பந்தமாக கட்சிக்குள் தகராறு என்று, பல பத்திரிகைகள் ஆதாரமற்ற பொய்களை அள்ளி வீசுகின்றன. கேரளத் தேர்தல் முடியும் வரை பிற்போக்காளர்கள் இப்படிப் பிரச்சாரம் செய்வார்கள் என்பது எங்களுக்கும், ஏன் உங்களுக்கும் தெரியும். கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை எப்படியிருக்க வேண்டும் என்று நேருவோ, மற்றவர்களோ சொல்லி நிர்ணயிப்பதில்லை."

கம்யூனிஸ்ட்கட்சிஇந்தஎல்லைத் தகராறைப் பேசித்தீர்க்கவேண்டுமென்று கூறுகிறது. இந்த எல்லையை நிர்ணயிப்பதற்கு இந்த எல்லை இயற்கை, மலை, நதி, முதலியமைகளை வைத்து இரண்டு சர்க்கார் சர்வே பார்ட்டிகளை வைத்து சர்வே செய்து தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. மக்மஹோன் கோடு தான் எல்லை என்று இந்தியாவும், சீனுவின் படங்களில் நூற்றுண்டுகளாக உள்ள இடங்களை எப்படி விட்டுக் கொடுக்க முடியும் என்று சீனுவும் பேசினுல் பிரச்சினை தீர முடியாது. ஆகவே பிரச்சினையை பேசித் தீர்க்கவேண்டும். இல்லை என்ருல் வேறுவழி என்ன வென்று நேரு கூறவேண்டும்.

#### தோல்வியுறும்

நிலைமையைத் தெரிந்தும் வேண்டுமென்றே நாட்டு மக்களின் கவனத்தை திருப்புகின்ற முறையில் சிலர் பேசி வருகிருர்கள். எல்லை விஷயத்தை வைத்துக் கொண்டு கம்யூனிஸ்ட் கட்சியில் பிளவு உண்டுபண்ண வேண்டுமென்று விரும்புகிருர்கள். அதுமட்டுமல்ல, கட்சியில் தகராறு வரவேண்டுமென்று விரும்பிப் பொய் பிரச்சாரம் செய்கிருர்கள். இம்மாதிரி இதற்கு முன் பல முறை இவர்கள் விரும்பி செய்த பொய்ப் பிரச்சாரம் எப்படித் தோல்வியடைந்ததோ, அதே மாதிரி தான் இப்போதும் தோல்வி அடையும். காங்கிரஸ் கட்சியில் தான் இன்று பிளவுகளும், தகராறுகளும் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறதே தவிர, கம்யூனிஸ்ட் கட்சியில் அல்ல. காங்கிரசிற்குள் நடைபெறும் சண்டைகளை, குழுக்களை நேருவினுலேயே தீர்க்கமுடியவில்லை, தீர்க்கப் போவதுமில்லை" என்ருர்.

#### விலைவாசி உயர்வு

அவர் மேலும் கூறுகையில், "இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றிய பின்னர் புளி, மிளகாய், முதற்கொண்டு விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது. இனி 3-வது ஐந்தாண்டுத் திட்டம், 10 ஆயிரம் கோடி ரூபாய் செலவில் நிறைவேற்றும் போது விலைவாசிகள் இன்னும் பலமடங்கு கூடுமே! என்று நினைக்க வேண்டி இருக்கிறது. உணர்ச்சிவசப்பட்டு பேசும் நேரு இதில் ஏதோ கோளாறு இருக்கிறது யோசிக்க வேண்டுமென்கிருர். இந்த விலைவாசி எங்கே போய் நிற்குமோ, கடவுளுக்குத்தான் தெரியும் என்று காமராஜர் கூறுகிருர். இவர்கள் மந்திரிகள். இப்படிப் பேசுகிருர்கள்.

"விலைவாசி ஏற்றம், ஆசிரியர்கள் போன்ற சாதாரண சிப்பந்திகளின் மனேபாவத்தையே மாற்றிவிடும். ராஜ்ய சர்க்கார் மத்திய சர்க்கார் நிதி நிலைமையை அனுசரித்து திட்டங்கள் இருக்க வேண்டும். மக்களின் கொந்தளிப்பை அடக்குவதற்கு பதிலாக சர்க்கார் பிரச்சினையைத் தீர்க்க முயல வேண்டும். அதனுல் தான் இதற்கு கம்யூனிஸ்ட் கட்சி கூறும் யோசனைகளை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று கூறுகிருேம்.

#### விலைவாசி குறையும் என்கிருர் மந்திரி ஆனுல் விலை கூடுகிறது

'2 லட்சம் டன் அரிசியை வைத்துக் கொண்டு, விலைவாசி கூடினுல், நியாயவிலைக் கடைகளை திறந்து விலைவாசி உயராமல் தடுத்துமக்களைப் பாதுகாப்போம் என்று மந்திரிமார் கூறினர். விலைகள் ஏறிவிட்டதே என்று இப்போது கேட்டால் யோசிக்கிருேம் என்கிருர்கள். விலைவாசி குறைவது பற்றி ஜோசியம் கூறுகிருர்! செப்டம்பர் 9-ந் தேதி சட்டசபையில் மந்திரி பக்தவத்சலம் வெளியிட்ட வெள்ளை அறிக்கையில் தற்போது ஒரு மூடை நெல் 17 ரூபாயாக விற்கிறதென்றும் மேலும் விலை இறங்கும் என்றும் கூறினுர். ஆனுல் இப்பொழுது 19 ரூபாயாகிவிட்டது! இதற்கும் வழக்கம் போலில்லாமல் விலை ஏறும் சீசன் முந்திக் கொண்டது என்கிருர். நியாயவிலைக் கடையில் கூட அதிக விலைக்கு விற்கிறீர்களே என்று கேட்டால் மார்க்கெட் நிலவரத்தை ஒட்டி விற்கப்படுகிறது என்று கூறுகிருர்கள். இதற்குப்பெயர் நியாய விலைக் கடையா? நியாயவிலைக் கடையில் இம்மாதிரி விலை நிர்ணயிக்கப்பட்டிருந்தால் மார்க்கெட் நிலவரம் குறையுமா? என்று கம்யூனிஸ்ட் கட்சி கேட்கிறது" என்ருர்.

"எனவே சர்க்கார் உணவுக்கு மானியம் கொடுத்து படி அரிசி 12 அணுவிற்கு விற்கவேண்டும்.

மேஜர் பஞ்சாயத்து முனிசிபாலிட்டிகள் இருக்கக்கூடிய நகரங்களில் வசிக்கக்கூடியவர்கள் அரிசி வாங்கி சாப்பிடக்கூடியவர்கள். இவர்களைக் கணக்கிலெடுத்து அடையாள கார்டுகள் கொடுத்து 500 குடும்பங்களுக்கு ஒரு கடை வீதம் திறந்து அரிசி விநியோகிக்கவேண்டும்" என்ருர்.

#### நடவடிக்கை எடுக்காதது ஏன்?

அவர் தொடர்ந்து பேசுகையில், "வியாபாரிகளிடம் சர்க்கார் கொள்முதல் செய்ய சட்டம் போட்டது. சர்க்காரை ஏமாற்ற வியாபாரிகள் கமிஷன் வியாபாரிகளாக மாறிவிட்டோம் என்று ஏமாற்றுகிருர்கள். சட்டம் போட்டு ஏழு மாதங்களுக்குப் பின்னுல் வியாபாரிகள் கமிஷன் வியாபாரிகளாக மாறி சர்க்காரை ஏமாற்றிவிட்டார்கள் என்று சட்டசபையில் சொல்லுவதற்கு மந்திரி பக்தவத்சலத்திற்குக் கூச்சப்படவில்லை. சர்க்கார் யந்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டு இம்மாதிரி மந்திரி கூறுவது முறையா? வியாபாரிகளிடம் கொள்முதல் செய்வதற்குப் பதிலாக உற்பத்தி செய்யும், நிலச்சுவான்தாரிடம் கொள்முதல் செய்யவேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது. இடுப்பு வேஷ்டியைகட்டி விடுவதற்குக்கூட ஆள்வைத்துக் கொண்டுள்ள ஒரு நபருக்கு கிருஷிக் பண்டிட் என்ற பட்டத்தை கொடுக்கும் சர்க்கார் நாம் கூறும் யோசனை ஏற்குமோ என்னவோ" என்று கூறினுர்.

#### கொள்முதல் செய்

லெவி முறையில் 10 ஏக்கர் நஞ்சை நிலங்களுக்கு மேற்பட்டிருக்கும் விவசாயிகளிடம் கொள்முதல் செய்யவேண்டும். பிரதேசவாரியாக ஏக்கருக்கு விவசாய விளைச்சல் என்னவென்று கணக்கிட்டு அதற்குத் தகுந்தவாறு கொள்முதல் செய்வதற்கு டிமான்ட் நோட்டீஸ் கொடுத்து பக்கத்திலுள்ள சர்க்கார் கிடங்குகளில் கொண்டுவந்து மூட்டைகளைப் போட்டுவிட்டு பணத்தை வாங்கிக்கொண்டு போ என்று சட்டம் இயற்றவேண்டும். இது மட்டு மல்லாமல் தமிழ் நாட்டில் கோவில்களுக்கு 4 லட்சம் ஏக்கர் நிலத்திற்குமேல் உள்ளது இதிலிருந்து விளையும் நெல்களை சர்க்கார் விலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும். இதிலிருந்து 1½ லட்சம் டன் கிடைக்கும்.

ஆதலால் இந்த நாட்டு மக்கள் வாழ்வதா? பெரிய மனிதர்கள் வாழ்வதா? என்ற நிலைமைக்கு ஒரு முடிவுகட்ட வேண்டும். விலைவாசி உயர்வு என்ற அரக்கனின் உயிர் பெரும் நிலச்சுவான்தார்களிடம் உள்ள நெல்லை கொள்முதல் செய்வதின் மூலம்தான் போக்க முடியும். எனவே சர்க்கார் மேற்கண்ட முறையில் கொள்முதல் செய்யவேண்டும்.

தோழர் பி. ராமமூர்த்தி அவர்களுக்கு, கட்சிக்கிளைகள்,தொழிற் சங்கங்கள், விவசாய சங்கங்கள் சார்பாக மாலைகளும், கைத்தறித் துண்டுகளும் அணிவிக்கப்பட்டன.

15-வது வார்டு மாதர்கள் சார்பாக வீடு வீடாக தாயமார்கள் தியாகி தோழர் எம். ஏ. வெங்கடாசலம் குடும்ப நிதிக்காக வசூலித்த ரூ. 31 8-0ம் ஆயக்குடி லிங்கம்மாள் ரூ. 5ம், கோம்பைப் பட்டி விவசாயிகள் ரூ. 10ம் கொடுத்தார்கள்.

---

## பத்திரிகை நிருபரின் சரடுக்கு டாக்டர் பாலிகா மறுப்பு

### நேருவைச் சந்தித்த பிறகு விடுத்த அறிக்கை

பம்பாய், நவ. 14—

"கடுமையான பனியின்காரணமாகவும், மோசமான தட்ப வெப்ப நிலையின் காரணமாகவுமே லடாக் சம்பவத்தின்போது பிடிக்கப்பட்ட இந்திய கைதிகளை விடுதலை செய்வதில் கால தாமதம் ஏற்பட்டது. இந்தச் செய்தியை சீனப் பிரதமர் சூயென்-லாய் கூறினர்" என்று இந்திய சோவியத் கலாசார உறவுக் கழகத் தலைவர் திரு. ஏ. வி. பாலிகா கூறினர்.

திரு. பாலிகா அண்மையில் சீனத்தில் சுற்றுப்பயணம் மேற்கொண்டுவிட்டு நேற்று டில்லி திரும்பினர். டில்லியில் இந்திய பிரதமரைச் சந்தித்த பின்னர் பம்பாய் வந்து சேர்ந்தார்.

சீனத்தில் சூயென்-லாயைதாம் இரு முறை சந்திப்பதற்கு வாய்ப்புக் கிடைத்ததென்று கூறிய அவர் மேலும் கூறுகையில், "லடாக் சம்பவத்தின்போது இந்திய தலைமைக் காவலர் கரம்சிங் கொல்லப்பட்டதாகக் கூறப்படுவது தவறான செய்தியாகும். ஏனெனில் சிங் உயிருடன் இருப்பதாகவும், கைதிகள் விடுதலை செய்யப்படும்பொழுது அவரும் விடுதலை செய்யப்படுவாரென்றும் சூயென்-லாய் கூறினர்" என்ருர்.

கரம்சிங் இறந்துவிட்டதாக அவருக்கு கூட்டங்களில் அஞ்சலிசெலுத்தியதும்,நேருவே ஒரு கூட்டத்தில் அவரது சேவையைப் புகழ்ந்து கூறி, இரங்கல் தெரிவித்ததும் வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.

கைது செய்யப்பட்ட காவலர் கரம்சிங்கை கிம்சிப்படுத்தப்பட்டு சீன ராணுவத்தினர் வாக்குமூலம் வாங்கினர்கள் என்று பாலிகா கூறியதாக ஹிந்துஸ்தான் பத்திரிகை நிருபர் ஒருவர் கயிறு திரித்திருந்தார். அந்தச் செய்தி அப்பட்டமான பொய் என்றும், அவ்வாறு தாம் கூறவில்லையென்றும் திரு. பாலிகா கூறினர்.

உயிரிழந்த சிப்பாய்களை சீனம் உடனடியாக திருப்பித்தாரததற்குக் காரணம் நாட்பட்ட பிறகு சடலங்கள் அழுகி, எவ்வாறு காயம்பட்டது,என்ன ஆயுதங்கள் உபயோகப்படுத்தப்பட்டன என்பது தெரியாமல் போவதற்காகவேயென்றும், அதுவே சீனுவின் நோக்கம் என்றும் பாலிகா கூறியதாகவும் பிறிதொரு பொய்ச் செய்தியை ஹிந்துஸ்தான் நிருபர் சுற்றிவிட்டிருந்தார். இதனையும் பாலிகா மறுத்துக் கூறினர்.

## சமாதான தீர்வையே சீனு விரும்புகிறது

### ஜப்பானியப் பிரமுகர் கருத்து

பிகிங் நவ. 13—

ஜப்பானில் ஆட்சி பீடத்தில் இருக்கும் மிதவாத ஜனநாயகக் கட்சியின் பிரமுகரான கென்ஸோ மட்ஸுமுரா சீனுவுக்கு விஜயம் செய்துள்ளார். இந்தியாவுடன் ஏற்பட்டுள்ள எல்லைத் தகராறை சீனு சமாதான முறையிலேயே தீர்க்க விரும்புகிறது. எல்லாவிதமான பலாத்கார நடவடிக்கைகளையும் கையாள விரும்பவில்லை என்று தாம் கருதுவதாக அவர் கூறினர்.

## சாயிநாதபுரத்தில் நவம்பர் புரட்சி தினம்

வேலூர், நவ. 12—

வேலூரையடுத்த சாயிநாதபுரத்தில் 7-11-59-ல் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் நவம்பர் புரட்சிதினம் பொதுக்கூட்டம் தோழர் வி. என். சீராமன் தலைமையில் நடைபெற்றது. வேலூர் வேலப்பாடி, துரைப்பாடி, குப்பம், அக்ரஹாரம் முதலிய சுற்று வட்டார கிராமங்களிலிருந்தும் திரளான மக்கள் கலந்து கொண்டனர். தோழர் ஐ. மாயாண்டி பாரதி (ஜனசக்தி துணை ஆசிரியர்), தோழர் வி. என். கிருஷ்ணன் ஆகியோர், உணவு நிலை பற்றியும், இந்திய—சீன எல்லைத் தகராறு சுமுகமாகத் தீர்ப்பது ஒன்றுதான் தேசபக்தி வழி என்றும் பேசினர்.

## அ.இ. பார்வர்ட்பிளாக் கட்சி மாநாடு

சந்திரநாகூர், நவ. 13—

அகில இந்திய பார்வர்ட் பிளாக் கட்சியின் மகாநாடு இன்று ஆரம்பமாயிற்று. மகாநாடு மூன்று நாட்கள் நடைபெறும். மகாநாட்டில் நூறு பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.

இந்திய—சீன எல்லைப் பிரச்சினை பற்றியும், நாட்டில் ஏற்பட்ட வெள்ளச்சேதம் பற்றியும் மகாநாட்டில் விவாதிக்கப்பட்டன.

கல்கத்தாவில் நடந்த உணவுப் போராட்டத்தில் உயிர் நீத்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்டது.

---

## சோவியத்-இந்திய பொருளாதார ஒப்பந்தம்

**[டி. ஷோரோகோவ்]**

மூன்றுவது ஐந்தாண்டு திட்டத்திற்காக இந்தியாவிற்கு சோவியத் அரசு 150 கோடி ரூபிள் (80 கோடி ரூபாய்) கடன் உதவி அளிக்க இசைந்துள்ளது குறித்து இந்தியப் பொதுஜன அபிப்பிராயம் பெரு மகிழ்ச்சி அடைந்தது. இதுபற்றி "இந்து" பத்திரிகை தீட்டிய தலையங்கத்தில், "நமது மூன்றுவது ஐந்து ஆண்டு திட்டத்தின் நோக்கம் நமது சொந்த கன-இயந்திர தொழிலை வளர்ந்தோங்கச் செய்வதேயாகும். எனவே இது விஷயத்தில் ரஷ்யாவின் உதவி விலைமதிப்பற்றதாகும்" என்று குறிப்பிட்டது.

இந்திய அரசின் பிரதிநிதிகள் பி. கே. நேருவும் கே. பி. லாலும் சோவியத் வெளிநாட்டு பொருளாதார உறவுகள் கமிட்டியுடனும் சோவியத் வெளிநாட்டு வர்த்தக அமைச்சகத்துடனும் நடத்திய பேச்சுவார்த்தைகளின் விளைவாக சமீபத்தில் ஒரு புதிய சோவியத்-இந்திய வர்த்தக ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று.

#### வேறுபாடே இல்லை

இந்தப் பேச்சுவார்த்தைகளின் போது எவ்விதமான தப்பபிப்பிராயமோ, கருத்து வேறுபாடோ எழுவதற்கு இடமில்லாத வகையில் சோவியத் பிரதிநிதிகள் நடந்து கொண்டனர் என்று திரு. பி. கே. நேரு குறிப்பிட்டுள்ளார். சோவியத்-இந்தியப் பொருளாதார ஒத்துழைப்பை வளர்ப்பதற்கு இந்த ஒப்பந்தம் நிச்சயமாக உதவி புரியும் என்றும் அவர் அறிவித்தார்.

இந்தியாவிற்கு 180 கோடி ரூபாய் கடன் வழங்குவதற்கு இந்த ஒப்பந்தம் வகைசெய்கிறது. இத்தொகையில் ஒரு பகுதி, மூன்றுவது ஐந்து ஆண்டுத் திட்ட காலத்தில் இந்திய சர்க்கார் நிறுவவிருக்கும் பல தொழிலியல், விவசாயத் திட்டங்களுக்கும், இதர திட்டங்களுக்கும், சோவியத் யூனியன் அளிக்கும் தொழில்நுட்ப உதவிக்கான செலவை சமாளிப்பதற்குப் பயன்படுத்தப்படும். மூன்றுவது ஐந்து ஆண்டுத் திட்டத்தில் வகுக்கப்பட்டுள்ள திசையில் மேலும் முன்னேற்றகரமான பொருளாதார வளர்ச்சியைக் காண்பதற்குஉதவக்கூடியஅவசர அவசியமான நிர்மாணத் திட்டங்களை காலதாமதமின்றி மேற்கொள்ளுவதற்கு சோவியத்கடன் உதவி புரியும். இந்தியாவிடம் விசுவாசமுள்ள உண்மை நண்பனுன சோவியத் யூனியன், இந்திய சர்க்காரின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு இவ்வாறு மீண்டும் முந்திக் கொண்டுள்ளது.

#### புதிய ஒப்பந்தம் பற்றி பி. கே. நேருவின் கருத்து

திரு. பி. கே. நேரு அவர்கள் மாஸ்கோ ரேடியோவில் மேற்படி புதிய ஒப்பந்தம் பற்றி கீழ்க்கண்ட கருத்துக்களைத் தெரிவித்தார்.

'இந்தியாவின் மூன்றுவது ஐந்து ஆண்டுத் திட்டம் சம்பந்தமான திட்டங்களுக்கு நிதி உதவும் பொருட்டு அளிக்கப்பட்டுள்ள கடனுக்குரிய நிபந்தனைகள் குறித்து இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்குமிடையே ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தில் நான் இப்பொழுதுதான் ஒப்பமிட்டேன். 18 கோடி ரூபிள் பெறுமான கடன் உதவி இது. இத்தொகை 12 ஆண்டு காலத்தில் திருப்பித்தரப்பட வேண்டும். சாத்தியமான பெருமளவிற்கு இந்தியாவின் சரக்குகளை சோவியத் யூனியனுக்கு ஏற்றுமதி செய்வதின் மூலம் இத்தொகை திருப்பித்தரப்படலாம்.

"ஆண்டொன்றிற்கு 2·5 சதவிகித வட்டிக்கு இந்தக் கடன் வழங்கப்பட்டுள்ளது. நாங்கள் பிற நாடுகளிலிருந்து வாங்கியுள்ள கடன்களுக்காக செலுத்தும் மிகவும் குறைவான வட்டி விகிதத்தைவிடக் குறைவானது இது.

"எந்தெந்தத் திட்டங்களுக்கு நிதி உதவி அளிக்கப்படும் என்பது இன்னமும் நிர்ணயிக்கப்படவில்லை. ஆனுல் ஒரு சில வாரங்களுக்குள் இத்திட்டங்கள் ஒவ்வொன்றையும் குறிப்பிடும் ஒப்பந்தம் ஒன்றை செய்துகொள்வோம் என்றுஎதிர்பார்க்கிருேம்.

"நமது மூன்றுவது ஐந்து ஆண்டுத் திட்டத்திற்காக நமக்கு அளிக்கப்பட்டுள்ள முதல் கடன் உதவி இதுவே. இது உண்மையில் முக்கியத்துவம் வாய்ந்த நல்லதொரு ஆரம்பம் என்பதில் ஐயமில்லை" (ரஷ்ய மொழியிலிருந்து மீண்டும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டதின் தமிழாக்கம்).

#### மிகவும் சாதகமான கடன் நிபந்தனைகள்

2.5 சதவிகித வட்டிக்கு இதுவரை எந்தவொரு முதலாளித்துவ நாடும் கடன் உதவி அளித்ததில்லை. அவை பெரும்பாலும் 5 அல்லது 6 சதவிகித வட்டியோ, அதற்கு அதிகமான வட்டியோ கோருகின்றன. சோவியத் கடன் உதவியின் ஒரு முக்கிய அம்சம் என்னவெனில், தற்பொழுது இந்தியாவை எதிர்நோக்கும் கடுமையான வெளிநாட்டுச் செலாவணித் தட்டுப்பாட்டை, அந்நாடு சமாளிப்பதற்கு அது உதவி புரியும்:

இந்தப் புதிய கடனைத் திருப்பித் தருவதற்காகவும், இதற்கு முன் பிலாய இரும்பு, உருக்கு ஆலை, மருந்துகள் உற்பத்தித் தொழிற்சாலை, எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம், மூக்குக் கண்ணுடித் தொழிற்சாலை முதலியவற்றின் நிர்மாணத்திற்காக அளிக்கப்பட்ட சோவியத் கடன்களைத் திருப்பித் தருவதற்காகவும் இந்தியா தனது ஸ்டெர்லிங் நிலுவைகளைப் பயன்படுத்த வேண்டியதில்லை.

இந்தக் கடன் உதவியால் இந்தியாவிற்குக் கிடைக்கும் ஆதாயம் இது மட்டுமல்ல. இந்தக் கடன் தொகையானது இந்தியாவின் சுதேசித் தொழில்களை வளர்ந்தோங்கச் செய்வதற்குப் பயன்படுத்தப்படும் என்பது எல்லாவற்றையும்விட முக்கியமானது. அன்னிய ஏகாதிபத்திய வட்டாரங்கள் இந்தியா தொழில்மயமாக்கப்படுவதை எதிர்த்து வருகின்றன என்பது இங்கு கவனிக்கத்தக்கது. இந்தியா தனது விவசாயத்தை வளர்ந்தோங்கச் செய்யவேண்டும் என்று அவர்கள் உபதேசித்து வருகின்றனர். இதன் மூலம், வெறும் மூலப்பொருள் சந்தையாக இந்தியா தொடர்ந்து விளங்க வேண்டும் என்பது அவர்களது விருப்பம். இத்தகைய நோக்கங்கள் சோவியத் யூனியனுக்கு முற்றிலும் புறம்பானவை. இதே போல், கடன்கள் வழங்குவதற்கு அரசியல் நிபந்தனைகளையோ, இதர வகையான நிபந்தனைகளையோ விதிப்பதும் சோவியத் யூனியனின் கோட்பாடுகளுக்குப் புறம்பானவையாகும்.

இந்தியாவின் பொருளாதாரம் முன்னேறி வருவது குறித்து சோவியத் மக்கள் மகிழ்ச்சி அடைகின்றனர். இந்த முன்னேற்றத்திற்குத் தாங்களும் உதவ முடிந்துள்ளது குறித்துஅவர்கள்பெருமிதம் அடைகின்றனர். ஆனுல் இந்த உதவியை ஏதோ பரோபகார தரும கைங்கரியமாக சோவியத் மக்கள் கருதவில்லை. தமது பிரம்மாண்ட ஏழாண்டுத் திட்

(3-ம் பக்கம் பார்க்க)

---

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### ஆபத்து! ஆபத்து!!

ஐயா,

ஓமலூர் தாலூகா, தாராமங்கலம் உயர்நிலைப்பள்ளியில் சுமார் 1000 குழந்தைகள் படிக்கிருர்கள். போர்டு நிர்வாகத்தின் கீழ் நடைபெறுகிறது. போலீஸ் நிலையத்தின் அருகில் இருக்கும் இந்த பள்ளிக்கூடத்தின் சுவர் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது.

மழைபெய்தால் தண்ணீர் முழுவதும் சுவருக்குள் போகிறது. மழையால்நனைந்த சுவர் நாளுக்கு நாள் கரைந்து விழுந்துகொண்டிருக்கிறது.

இதைப்பற்றி நிர்வாகம் அக்கறை காட்டியதாகவே தெரியவில்லை. குழந்தைகள் படிக்கின்ற இடத்தில் இவ்வளவு அபாயம் இருப்பதைக்கண்டு பெற்ருேர்கள் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பவே பயப்படுகின்றனர்.

எனவே, அதிகாரிகளாவது இதைக் கவனித்து ஆவன செய்ய முன் வருவார்களா?

ஆறுமுகம்
(பஞ்சாயத்து உறுப்பினர், தாராமங்கலம்)

### மதிய உணவுத் திட்டத்தின் லட்சணம்

ஐயா,

திருச்சி மாவட்டம் லால்குடி வட்டம் வாளாடி கிராமத்திலிருக்கும் மாவட்டக் கழக ஆரம்பப் பள்ளியில் ஏழைக் குழந்தைகளுக்குப் பகல் உணவு அளிக்க குறைந்தது ¼ படி அரிசியாவது ஒவ்வொரு குழந்தையும் கொண்டு வரும்படி கூறப்படுகிறது. அப்பள்ளியில் படிக்கும் 90 சதவிகிதக் குழந்தைகள் அன்ருடம் வயிற்றுக்கு அரும்பாடுபடும் ஏழை விவசாயக் கூலிகளின் குழந்தைகள். இந்நிலையில் எவ்வாறு குழந்தைகள் அரிசி கொண்டுவந்து கொடுத்து, மதிய உணவு சாப்பிட்டு, படிக்க முடியும்? அரசாங்கத்தின் மதிய உணவுத் திட்டத்தின் லட்சணம் இதுதானு? 18-11-59-ம் நாள் மாநில கல்வி அதிகாரியிடமிருந்து ஒவ்வொரு வீட்டிலும் அரிசி, தானியம் வசூல் செய்ய வேண்டுமென்று உத்தரவு வந்திருப்பதாகக் கூறப்படுகிறது. அரசாங்கம் ஏன் நிலப்பிரபுக்களிடம் மொத்தமாக மதிய உணவிற்கு என்று கேட்டு வாங்கக் கூடாது?

த. ரெத்தினவேல்,
வே. வீரராகவன்.

●

### ஆஸ்பத்திரியும் மருந்தும்

ஐயா,

இருபதினுயிரம் ஜனத்தொகை கொண்ட துறையூரில் இருக்கும் லோக்கல் பண்டு ஆஸ்பத்திரியில் வைத்திய வசதிமிகமிகக் குறைவு. மக்கள் பெரிதும் அவதிப்படுகின்றனர். சுற்று வட்டாரத்தில் உள்ள சுமார் நாற்பது, ஐம்பது கிராமங்களில் வாழ்கின்ற மக்களும் இந்த ஆஸ்பத்திரியைத் தான் நம்பியிருக்கின்றனர்.

ஆஸ்பத்திரியில் டாக்டரிடம் போய் கேட்டாலும் சரியாக மருந்து கிடைப்பதில்லை. எனவே அதிகாரிகள் இதைப் பற்றி கவனித்து ஆவன செய்வார்களா?

சுந்தரம்
துறையூர்

---

## ஈராக் பிரதமரைக் கொல்ல மீண்டும் சதி?

கெய்ரோ, நவ. 14—

மருத்துவ மனையில் சிகிச்சை பெற்றுவரும் ஈராக் பிரதமர் அப்துல் கரீம் காசிமைக் கொல்ல மீண்டும் முயற்சி நடைபெற்றதாக 'அல்அஹரம்' என்ற செய்தித் தாள் கூறுகிறது. எனினும் இச்செய்தியை ஈராக் அரசாங்க வட்டாரம் இதுவரை உறுதி செய்யவில்லை.

சிலர்மருத்துவமனைக்குள்புகுந்ததாகவும், அவர்களை எதிர்த்துக் காவலர்கள் போரிட்டதாகவும், காசிமின் அறையை அடையமுடியாது என்று தெரிந்த பின்னர் கொலை செய்ய முயன்றவர்கள் தப்பிச் சென்றுவிட்டார்களென்றும் அச் செய்தித்தாள் கூறுகிறது.

---

# நாடும் நடப்பும்

## உள்ளதைச் சொன்னுல்!

"சோவியத் யூனியன் கிழக்கு உலக நாடுகளுக்கு தன்னலம் கருதாது உதவி செய்கிறது. வெளிநாடுகளுக்கு உதவி செய்யச் செல்லும் சோவியத் நிபுணர்கள் அரும்பாடுபட்டு வேலை செய்வதுடன், அந்நாடுகளின் உள்விவகாரங்களில் தலையிடுவதில்லை' என்று திரு. எச். மாளவியா கூறியிருக்கிருர். இவர் ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் ஒருமைப்பாட்டுக் கமிட்டியின் நிரந்தர செயற்குழுவில் இந்தியப் பிரதிநிதியாகப் பணியாற்றுபவர். "உண்மையை ஒரு நாளும் சொல்ல வேண்டாம்" என்று சில அரசியல் கட்சிகள் புதியஆத்திச்சூடி பாடும்பொழுது இவர் இப்படிக் கூறலாமா? நல்ல வேளை! மாளவியா தலை தப்பியது! "மாளவியாவே ராஜினுமாச் செய்" என்று பி.சோ., ஜனசங்கங்கள் இன்னும் கொடியைத் தூக்கிக் கொண்டு புறப்படவில்லை. சுதந்திரக் கட்சி மாளவியாவிற்கு "கம்யூனிஸ்டு ஏஜண்டு" என்று பட்டம் கட்டவில்லை! ஏனெனில் இவர்களிடமிருந்து பாதுகாப்பு மந்திரியே தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

இனிமேல் வினேபாஜிக்குக் கூட 'கம்யூனிஸ்டு ஏஜண்டு' என்று சிலர் பட்டம் கட்டினுல் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனெனில் கேரள கம்யூனிஸ்டு அரசாங்கம் கொண்டுவந்த நிலச் சட்டத்தை வரவேற்ருர்; நிலவெளியேற்றத்தைத் தடுத்ததைப் பாராட்டினுர். அமிர்தசரஸ் தீர்மானம் ஏமாற்று வித்தை என்று அவரது புதிய சீடகோடி ஜெயப்பிரகாஷ் கூறியதை மறுத்து, அத்தீர்மானத்தை வரவேற்கவேண்டுமென்ருர். கம்யூனிஸ்டுகள் மீது தனக்கு நம்பிக்கை உண்டு என்ருர். ஐ.நா. சபையில் குருஷ்சேவ் நிகழ்த்திய சொற்பொழிவைப் புகழ்ந்து கூறினுர். இப்பொழுது இந்திய-சீன எல்லை விஷயம் பற்றி ஒரு நிருபர் கேள்வி கேட்டதற்கு எல்லா விஷயங்களையும் அறிந்து ஆராய்ந்துதான் கூற வேண்டும் என்று கூறிவிட்டார். பூதானம் வாங்குபவர்களுக்கு நிதானம் வேண்டுமென்கிருர். ஸ்ரீமான் ஜெயப்பிரகாஷ் நாராயணனுக்குப் புரியுமோ என்னவோ?

★

## அவியல் அரசியல்

பம்பாயில் பி. சோ. கட்சியின் வெள்ளிவிழா மாநாடு நடைபெற்றது. அம்மாநாட்டு நிகழ்ச்சிகளைப் படித்ததும் சர்க்கஸ் கோமாளிகளின் நினைப்புத்தான் வந்தது. சீனுவை எதிர்த்துப் போராடுவதற்கு பி. சோ. கட்சி காங்கிரசோடு கூட்டுச் சேர வேண்டுமென்று சிலர் கூறினுர்களாம். ஆமாம்! கூட்டுச் சேர்ந்துதான் ஆகவேண்டுமென்று அசோக் மேதாவும் ஒற்றைக் காலில் நின்ருராம். பாவம்! அவரது அத்யந்த சிஷ்யர்கள் அவரைத்தோற்கடித்து ஒற்றைக் காலிலேயே நிற்க வைத்து விட்டார்கள். அத்துடன் அவர்கள் விடவில்லை. அசோக் மேதாவையே பி. சோ. கட்சியின் தலைவராகவும் நிற்க வைத்து விட்டார்கள்!

கேரள விஷயம் வந்தது. உடனே காங்கிரசோடு பி. சோ. கட்சி கூட்டுச் சேர்ந்ததற்கு ஏகப்பட்ட வரவேற்பு! கம்யூனிஸ்டுகளைத் தோற்கடிப்பதற்கு வேண்டுமானுல் காங்கிரசோடு சேர்ந்து கொள்ளலாம். கம்யூனிஸ்டுக் கட்சி தோற்றுவிட்டால் காங்கிரசோடு சேர்ந்து மந்திரிசபை அமைக்கக் கூடாது என்ருராம் ஒருவர். இங்ஙனம் பி. சோ. கட்சியின் கேரள கொள்கையும் ஒரே அவியல் மயமாக, கேட்பதற்கு ருசிகரமாக இருந்ததாம். கேரளமும் அவியலுக்குப் பெயர் போனதுதானே!

★

## சர்வரோக நிவாரணி

இந்திய-சீன எல்லை விஷயம் பலருக்கு சர்வரோக நிவாரணியாகிவிட்டது! வெறும் வாய்க்கு அவல் கிடைத்தது மாதிரி தூங்கிக் கிடந்த சில கட்சிகளுக்கு ஒரே கொண்டாட்டம் போங்கள். நேற்று பண்டித பந்த் கட்டாக்கிற்குச் சென்றிருந்தார். பீகார் மாநிலத்தின் சில பகுதிகளை ஒரிசாவோடு சேர்க்க வேண்டுமென்று மாணவர்கள் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். மந்திரி பார்த்தார். ஆஹா! இவர்களெல்லாம் சீனு ஆதரவாளர்கள் என்று ஒரே போடு போட்டு விட்டார்! பி. டி. ஐ. ஊழியர்கள் நிர்வாகத்திடம் தங்கள் கோரிக்கைகளைச் சமர்ப்பித்திருந்தனர். பள்ளி கொண்டிருந்த நிர்வாகம் விழிக்கவேயில்லை. வேலை நிறுத்தம் செய்யப்போவதாக ஊழியர்கள் அறிவித்தார்களோ இல்லையோ, அய்யோ; அடுக்குமா? சீனு படையெடுக்கும் பொழுது சம்பளம் கேட்கலாமா? கேட்டு வேலை நிறுத்தம் செய்யலாமா என்கிருர் நிர்வாகத் தலைவர் ஏ. டி. மணி!

பிர்லா என்ன சும்மா இருப்பாரா? ஐந்தாண்டுத் திட்டமாவது? பத்தாண்டுத் திட்டமாவது? எல்லையைக் காக்கத் திட்டம் போடுங்கள் என்று ஐந்தாண்டுத் திட்டத்திற்கே குழி பறிக்கப் பார்க்கிருர்! இவ்வளவு புரளிக்குப் பிறகும் அமெரிக்கா சும்மா இருக்குமா? எல்லை விஷயத்தில் அமெரிக்காவின் தார்மீக ஆதரவு இந்தியாவிற்குத்தானும். இன்றும் இந்தியாவிற்கு விரோதமாக பாகிஸ்தானில் இராணுவ தளங்கள் அமைக்கும் அமெரிக்கா ஆடுகினைகிறதுஎன்றுஅழுகிறது! ஹூம்! இன்னும் எல்லை விஷயம் எத்தனை பேர்களுக்கு சர்வரோக நிவாரணியாகப் பயன்படுமோ பார்ப்போம்!

கடைசியாக ஆசிரியர் கடித அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள். கொஞ்சநாட்களுக்கு உங்கள் ஊர், வட்டார குறைகளை எழுதி அனுப்பாமல் இருப்பது நல்லது. ஏனெனில் அதற்கும் "சீனு, சீனு" என்று கூற ஆரம்பித்து விடுவார்கள்!

—துருவன்

---

## நேருவுக்கு போட்டோ ஆல்பம் பரிசு

### கிராமத் தலைவர்களும் மாணவர்களும் அளித்தனர்

புதுடில்லி, நவ. 13—

எழுபது ஆரம்பப்பள்ளிக்கூடங்களின் போட்டோ நிறைந்த ஆல்பத்தை நேருவின் பிறந்த தினத்தை ஒட்டி அவரிடம் கொடுக்கப்பட்டது. இப்பள்ளிக்கூடங்கள் உத்தரபிரதேசத்திலுள்ளஇதாக்மாவட்டத்திலுள்ள கிராமவாசிகளே கட்டினர் கிராமத் தலைவர்கள் ஒன்பது பேரும், பள்ளி மாணவர்கள் எட்டு பேரும் சேர்ந்து இந்த அன்பளிப்பை நேருவிடம் கொடுத்தனர். பிரதமர் நன்றியறிதலைத் தெரிவித்தார். (பி. டி. ஐ.)

---

## ஜனுதிபதியின் மாகாணத்தில் போலி காங்கிரஸ் உறுப்பினர்

### இரு ஜில்லாக்களில் மட்டுமே 1 லட்சத்து 20 ஆயிரம்பேராம்

பாட்னு, நவ. 12—

காங்கிரஸ் கட்சியில் பெருவாரியாக போலி உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டிருப்பதை பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் பரிசீலனைக் கமிட்டி கண்டுபிடித்தது. பாட்னு ஷஹாபாத் ஆகிய ஜில்லாக்களில் மட்டும் சுமார் 1,20,000 போலி உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டிருப்பதாக தீர்மானிக்கப்பட்டது.

பல ஜில்லாக்களிலிருந்தும் புகார் வந்ததை முன்னிட்டு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இந்த பரிசீலனைக் கமிட்டியை நியமித்தது. இன்னும் பல ஜில்லாக்களில் இது போன்ற போலி உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டிருப்பதாக இக்கமிட்டியின் தலைவர் தெரிவித்தார்.

இந்த போலி உறுப்பினர்களை, உறுப்பினராக இருப்பதினின்றும் தள்ளுபடி செய்தற்காக காங்கிரஸில் உள்ள எதிர்ப்புக் கோஷ்டி ஆத்திரம் அடைந்துள்ளது. இது போன்று அதிகாரத்தில் உள்ள கோஷ்டி பல ஜில்லாக்களில் போலி உறுப்பினர்களைச் சேர்த்துள்ளது. இப்போது இந்த ஜில்லாக்களில் மட்டும் பரிசீலனை செய்யப்பட்டிருப்பது, எதிர் கோஷ்டியை பலவீனப்படுத்துவதற்காகச் செய்யப்பட்டதாக அவர்கள் புகார் கூறுகின்றனர். இதர ஜில்லாக்களிலும் இது போன்ற புகார்கள் வந்தபோதும் அந்த ஜில்லாக்களில் பரிசீலனை நடத்தப்படவில்லை என்று அவர்கள் கூறுகின்றனர்.

இதனுல், மண்டல காங்கிரஸில் ஒரு பெரிய பிளவை ஏற்படுத்தும் எனத் தெரிகிறது.

## சட்டப்படியல்லாத குழந்தைகளுக்கும் பங்கு

எர்ணுகுளம், நவ. 11—

காலமான சர்க்கார் ஊழியரின் சட்டரீதியற்றகுழந்தைகளுக்கும் சகாயநிதித் தொகையில் ஒரு பங்கு உண்டு என்று கேரள சர்க்கார் முடிவு செய்துள்ளது.

# பிரமலைக் கள்ளர்கள்மீது போலீஸ் நடவடிக்கை

## மீண்டும் குற்றபரம்பரைச் சட்டமா?

### தோழர்கள் கே. டி. கே. தங்கமணி எம்.பி. ஏ. பாலசுப்ரமணியம் கடும் கண்டனம்

மதுரை, நவ. 13—

மதுரை மாவட்ட பிரமலைக் கள்ளர் வகுப்பினர்களை, பிரிட்டிஷ் ஆட்சி நடைபெற்றபோது, குற்ற பரம்பரைச் சட்டத்தில் கொண்டுவந்து, ஆண்களையெல்லாம் தினசரி போலீஸ் ஸ்டேஷனில் கையெழுத்துப்போடும்படியும், ஒவ்வொரு நாள் இரவிலும் போலீஸ் ஸ்டேஷன் வாசலிலேயே பனியிலே படுத்துக் கிடக்குமாறும் கட்டளையிட்டு, அந்த மக்களை சொல்லொணாக் கொடுமைகளுக்கு ஆளாக்கினார்கள். அதே மாதிரியான அடக்கு முறையை மீண்டும் கொண்டுவர காங்கிரஸ் சர்க்கார் நடவடிக்கைகள் எடுத்து வருவதைக் கண்டித்து, தோழர் கே. டி. கே. தங்கமணி எம். பி. அவர்களும், கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை ஜில்லா கவுன்சில் காரியதரிசி தோழர். ஏ. பாலசுப்ரமணியமும் பின்வரும் அறிக்கையை பத்திரிகைகளுக்கு விடுத்துள்ளார்கள்.

**அறிக்கை விபரம்**

"மதுரை ஜில்லா போலீஸ் அதிகாரிகளின் உத்தரவுப்படி பிரமலைக் கள்ளர்களை அச்சுறுத்தி அடக்கிவைக்க ஒரு முயற்சி நடந்து வருவதாக அறிகிறோம். குற்றபரம்பரைச் சட்டம் ரத்தாகி விட்டதால், இந்த மக்கள் மீது போலீஸாருக்கு இருந்த பிடி தளர்ந்துவிட்டதாகவும் ஆகவே மீண்டும் போலீஸாரின் கண்காணிப்பின் கீழ் இவர்களைக் கொண்டுவர, ஒரு முயற்சி நடப்பதாகவும் அறிகிறோம்.

"வயது வந்த ஆண்கள் அனைவரின் பெயர்களையும், 12 வயது முதல் 16 வயது வரையுள்ள சிறுவர்களின் பெயர்களையும் ஊர்வாரியாகப் பதிவு செய்ய வேண்டுமென்றும், அவர்களை மாஜி குற்றவாளிகள் என்றும், குற்றம் புரியும் போக்குடையவர்கள் என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரித்துவைத்து கண்காணிக்க வேண்டுமென்றும் ஜில்லா போலீஸ் அதிகாரிகள் ஏற்பாடு செய்து வருகிறார்களாம்.

ஒவ்வொருவரைப் பற்றியும் ஒரு குறிப்பு தயாரித்து வைத்துக் கொண்டு, அன்னியர் ஆட்சியில் இருந்தது போலவே அடிக்கடி போலீஸ் கண்காணிப்பில் இவர்களை வைத்திருக்க வேண்டுமென்றும் ஏற்பாடு ஆகியுள்ளதாம்.

**அநாகரீகம்**

"இது அநாகரீகமான ஏற்பாடு. நாட்டின் விடுதலைக்காக போராடிய காலத்தில் இதே குற்ற பரம்பரைச் சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்றும், எந்தவொரு பகுதி மக்களையும் பரம்பரைக் குற்றவாளிகளெனக் கருதி விசேஷ ஒடுக்குமுறைகளுக்கு ஆளாக்கக் கூடாது என்றும் அன்று அனைவரும் போராடினோம். குற்ற பரம்பரைச் சட்டத்தையும் ரத்தாகும்படிச் செய்தோம்.

**உடனே கைவிடுக!**

"சுதந்திரம் பெற்று 12 ஆண்டுகளுக்கு பின்னர் இன்று மீண்டும் காங்கிரஸ் ஆட்சியின் கீழ் அதேநோக்கம்கொண்ட மேற்கூறிய நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன வென்றால் அதைக் கண்டு வியப்பும் வேதனையும் அடையாமலிருக்க முடியாது.

"சர்க்காரின் இந்த நடவடிக்கையால், பிரமலைக் கள்ளர் வகுப்பினரிடையே நியாயமான ஆத்திரமும் வருத்தமும் ஏற்பட்டுள்ளன.

உடனடியாக இந்த அநீதியான முறையற்ற புன்முயற்சி கைவிடப்பட வேண்டுமென்று நாங்கள் கோருகிறோம்."

# திண்டுக்கல் சுருட்டுத் தொழிலாளர் போராட்டம் முடிவு

திண்டுக்கல், நவ. 10—

திண்டுக்கல் பகவதி விலாஸ் சுருட்டுக் கம்பெனித் தொழிலாளர் 170பேர் போனஸ் வழங்கப்படவேண்டும் என்ற கோரிக்கையை வற்புறுத்தி அக். 23, 24 தேதிகளில் உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டனர். தொழிலாளர்கள் கம்பெனியின் உட்புறத்திலும் அவர்களுடைய குடும்பத்தினர் வெளிப் புறத்திலும் நின்று ஒற்றுமைக் கோஷங்கள் எழுப்பியவண்ணமிருந்தனர்.

இறுதியில் தினக்கூலியில் வேலை செய்யும் தொழிலாளருக்கு ரூ 4-0க்குக் குறையாமல் போனஸ் தருவதற்கு நிர்வாகம் சம்மதித்தது. மாதச் சம்பளக்காரர்களுக்கு ஒரு மாத சம்பளமும் அத்துடன் ரூபாய்க்கு 2 அணாவும் சேர்த்துத்தர நிர்வாகம் ஒத்துக்கொண்டது. திண்டுக்கல் தொழிலாளர் தலைவர் தோழர் எஸ் ஏ. தங்கராஜனும் பகவதி விலாஸ் ஒர்க்ஸ் கமிட்டித் தோழர்களும் சமரசப் பேச்சு வார்த்தைகளில் கலந்து கொண்டனர்.

# மயிலை பாரதி மன்றத்தின் ஆண்டு விழா

சென்னை, நவ. 11—

மயிலாப்பூர் பாரதி மன்றத்தின் இரண்டாம் ஆண்டு நிறைவு விழாவும் பாரதி விழாவும் நவ. 8ல் கொண்டாடப்பெற்றன. 'பிறமொழிக் கலப்பு-தமிழ் வளர்ச்சிக்கு உகந்ததா?' என்ற தலைப்பில் பட்டி மன்ற காலையில் நடைபெற்றது. திரு. கு. அழகிரிசாமி தலைமை வகித்தார். 'உகந்தது' என்று திருவாளர்கள் இ. பாலசுப்ரமணியம், ஏ. வி. ரங்கராஜன், எஸ். தியாகராஜன், டி. வி. கிருஷ்ணமூர்த்தி ஆகியோரும், 'உகந்ததில்லை' என்று திருவாளர்கள் ஊ. ஜெயராமன், வித்வான், அ. மாணிக்கம், வித்துவான் க.சாமிநாதன், த. சந்திரசேகரன் ஆகியோரும் வாதிட்டனர். தலைவர் தமது தீர்ப்பில் மொழி வளர்ச்சிக்கு, புழக்கத்தில் இருக்கும் சொற்களை எடுத்தாளல் அவசியம் என்றும், வேண்டுமென்றே பிற சொற்களைப் பயன்படுத்தல் தேவையற்றது என்றும், பழைய தமிழ்ச் சொற்களைக் [illegible] தமிழ் வளர்ச்சிக்கு உகந்தது என்றும் கூறினார்.

**பாரதி விழா**

மாலையில் பாரதி விழா மதுரை திரு எஸ். இராமகிருஷ்ணன் தலைமையில், நடைபெற்றது. மன்றத்தின் செயலாளர் திரு. முதில்வண்ணன், ஆண்டறிக்கை வாசித்தார். திரு. 'சூரஜ்' 'பாரதி இதயம்' என்பது பற்றிப் பேசுகையில் பாரதியின் இதயம் பக்தியால் நிரம்பிய இதயம் என்றார். 'பாரதி கண்ட சமுதாயம்' என்ற தலைப்பில் பேசிய திரு. ராமகிருஷ்ணன் அவர் சமுதாயத்தை உருவாக்க விரும்பினார் பாரதி என்றார். கூட்ட முடிவில் திரு. ஏ. வி. ரங்கராஜன் நன்றி கூறினார்.

# பட்டினிக் கொடுமையால் குழந்தையைக் கொன்ற தாய்!

## கருணை காட்டுமாறு சர்க்காருக்கு நீதிபதிகள் யோசனை

சென்னை, நவ. 13—

பத்து நாளாக தன் குழந்தையுடன் பட்டினி கிடக்கவேண்டிய துர்பாக்கிய நிலைமை ஒரு தாய்க்கு ஏற்பட்டது. குழந்தை பசி தாங்காமல் கதறுவது கண்டு உள்ளம் கொதித்து, ஆனால் ஒன்றும் செய்யமுடியாத நிலை ஏற்பட்டது அந்தத் தாய்க்கு.

ஒரு நாள் எதைச் செய்கிறோம் என்று தெரியாத மனக் குழப்பத்தில் தன் குழந்தையின் அழுகுரலை நிரந்தரமாக நிறுத்திவிட முடிவு செய்தாள். மீனாட்சி என்ற அந்த 22 வயது தாய் தன் குழந்தையை கிணற்றில் எறிந்தாள். அவளும் தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தாள். ஆனால், காப்பாற்றப்பட்டு விட்டாள்.

**கொலைக்குற்றம்**

தாயின்மீது கொலைக்குற்றம் சாட்டப்பட்டது. தென்னாற்காடு ஜில்லா செஷன்ஸ் நீதிபதி குற்றம் நிரூபிக்கப்பட்டதால் அந்த பெண்ணிற்கு ஆயுள் தண்டனை விதித்தார்.

**கருணை காட்டுக**

இந்த தீர்ப்பின்பேரில் சென்னை உயர்நீதி மன்றத்தில் "அப்பீல்" செய்துகொள்ளப்பட்டது.

வழக்கை விசாரித்த நீதிபதிகள் திரு. அனந்தநாராயணனும், திரு. ராமசாமியும் பெண்ணிற்கு கருணை காட்டவேண்டும் என்று சிபார்சு செய்து தீர்ப்புக்கூறினர்.

வயிற்றுக்கு இல்லாத கொடுமையால் இந்த வருந்தத்தக்க சம்பவம் நடந்திருக்கிறது. இதற்காக சமூகமே வெட்கப்படவேண்டும்.

'மீனாட்சிக்கு மூன்று ஆண்டுகள் சிறை தண்டனை விதிப்பதே போதுமானது. சேவா சதனத்தில் இந்தப் பெண்ணைச் சேர்த்து அவள் வாழ்விற்கு வழி வகுப்பதே சாலச் சிறந்தது'' என்று நீதிபதிகள் கூறினர்.

# ராமநாதபுரம் மாவட்டத்தில் போதுமான தண்ணீர் இருக்கிறதாம்

## கலெக்டரின் கருத்து

மதுரை, நவ. 13—

ராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள எல்லா நீர்ப்பாசனக் குளங்களும் நிறைந்திருப்பதாகவும், தொண்ணூறு சதவீதக் குளங்களுக்கு மேலுள்ள நிலங்களுக்கு வைகை நதி தண்ணீர் போதுமான அளவு கிடைக்குமென்றும் ராமநாதபுரம் கலெக்டர் கூறியுள்ளார். இதுக்கு ராமநாதபுரம் மாவட்டத்து விவசாயிகளுக்கு [illegible] விநியோகிக்கப்பட்டதாகவும் அவர் கூறினார். (பிடிஐ)

# கட்சித் தோழர் மறைவுக்கு இரங்கல் கூட்டம்

சென்னை, நவ. 12—

திருவல்லிக்கேணி கிளைத் தோழரும் பிரஸ்லேபர் யூனியன் அங்கத்தினருமான தோழர் ஆர். முருகேசன், நீண்டகாலமாக நோயுற்றிருந்து 11-ந் தேதி காலமானார். அன்னாரின் இறுதி வணக்கம் இரங்கற் கூட்டம், மயானத்தில் நடத்தப்பட்டது. தோழர் மு. பாலசுப்ரமணியம் தலைமையில் கா. மு. கணேசன் (கம்யூனிஸ்ட்), ஐ. (தி. மு. க.), ஜகந்நாதன் (பிரஸ்), ராமலிங்கம், (சாதுபிரஸ்) நாகராஜன் (பொதுநல ஊழியர் மன்றம்) ஆகியோர் இறுதிவணக்கம் செலுத்திப் பேசினர்.

# திண்டுக்கல் ஸ்பென்சர் நிர்வாகத்தின் போக்கு

திண்டுக்கல், நவ. 13—

திண்டுக்கல் ஸ்பென்சர் கம்பெனித் தொழிலாளர்கள் நான்கு மாதச் சம்பளம் போனசாகத் தரவேண்டும் எனக் கோரி அக். 21 முதல் 23 வரை உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர். மதுரை லேபர் ஆபீசர் தலையிட்டு கம்பெனியின் வரவு செலவுக் கணக்கு முடியாத நிலையில் தீபாவளிக்கு முன்பு ஒன்றரை மாதச் சம்பளத்தைப் போனஸ் முன்பணமாகத் தரச் சிபாரிசு செய்தார், அதன்பேரில் வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டது.

ஆனால் நிர்வாகம் எல்லாத் தொழிலாளருக்கும் முன்பணம் தர மறுத்துவிட்டது.

**சக்திவேல் சுருட்டுத் தொழிலாளருக்குப் போனஸ்**

திண்டுக்கல் சக்திவேல் சிகார் பாக்டரி தொழிலாளருக்கு ரூ. 35 போனசாகவும் ரூ. 20 முன்பணமாகவும் 1958-59-க்குத் தருவதெனவும்மாதச்சம்பளக்காரருக்கு ஒரு மாதச் சம்பளத்துடன் சம்பளத்தில் ரூபாய்க்கு 0-6-0 வீதம் சேர்த்துப் போனசாகத் தருவதெனவும் முடிவு செய்யப்பட்டது. ஏ.ஐ.டி.யு.ஸி. சங்கத்தின் சார்பில் தோழர் எஸ். ஏ. தங்கராஜனும் தேசிய சங்கத்தின் சார்பில் கே.ஏ. வாசி மலையும் கலந்து கொண்டனர்.

# ஒண்ணாயிருக்கணும் அண்ணாச்சி

(இந்தத் திண்ணைப் பேச்சு வீரரிடம் - என்ற மெட்டு)

எஸ். காமராஜ் (எம். சி.)

உணவுப் பொருள் விலை ஏறியாச்சு—எதிர்க்க
ஒண்ணாயிருக்கணும் அண்ணாச்சி—இதில்
கண்ணாயிருக்கணும் அண்ணாச்சி
எந்நாளும் நாட்டில் விலை ஏறாத வழியை
இப்போதே நாமும் உண்டாக்கணும்—இப்போ
(உணவுப் பொருள் விலை)

ஆட்சி செய்யும் அமைச்சரவர்களின்
போக்கினிலே அனேக வித்தியாசம்
விலை யேற்றத்திற்கு வித விதமாக
பேசு வதெல்லாம் வெளி வேஷம்—அந்த
பொல்லாத அமைச்சரை செல்லியே திருத்த
போராட நாமெல்லாம் ஒண்ணாகணும்—இப்போ
(உணவுப் பொருள் விலை)

கடையிருப்பதும் காத்துக்கிடப்பதும்
காலை முதலாக வேலையாச்சு
நாற்றமெடுத்தரிசி நாம் வாங்கிடவே
நாள் பூராவும் நின்றாச்சு—இந்த
அநியாயத்தை எதிர்க்க நாமனைவரும்
அரசியல் பேதமில்லா ஒண்ணாகணும்—இப்போ
(உணவுப் பொருள் விலை)

# அரசியல்வாதிகள் ஜாதிப்பிரஷ்டம் செய்துவிட்டார்களாம்

## மன்னத்தின் மனோ வேதனை

### பாதிரிகள் மீதும் பாய்ச்சல்

எர்ணாகுளம், நவ. 13—

அரசியல்வாதிகள் தம்மை இப்போது ஜாதிப்பிரஷ்டம் செய்துவிட்டார்கள் என்று கலவரத் தளபதி மன்னத்துப் பத்மநாபன் மனோ வேதனையுடன் கூறியுள்ளார். வேறு யாருடைய விவகாரத்திலும் தாம் ஏறிவந்து தலையிடப் போவதில்லை என்றும் அவர் கூறினார்.

திரு. களத்தில் வேலாயுதன் நாயர் வீட்டில் நிருபர்களைச் சந்தித்த போது மேற்கண்டவாறு கூறியதாகத் தெரிகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்கடிப்பது தமக்கும் நாட்டுக்கும் நல்லதோர் செயல் என்றும் இதற்காக முன்னணியிலோ, பின்னணியிலோ நின்று தாம் பாடுபடப் போவதாயும் அவர் கூறினார்.

பி. சோ. கட்சியினர் தனது பேச்சைக் கேட்க மறுக்கிறார்கள். காங்கிரசும் பி.சோ வும் அவசியம் என்று கோரினால் மட்டுமே தாம் அவர்களிடம் போகப் போவதாக அவர் கூறினார்.

தமக்கோ தமது கலவர சமிதிக்கோ சட்டசபையில் ஸ்தானங்கள் எதுவும் தேவையில்லை எனவும் ஆனால் கலவர இயக்கத்தில் நாயர்களும் கிறிஸ்தவர்களும் இருந்தார்கள் என்பதை அரசியல் கட்சிகள் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்றும் அவர் தாக்கீது செய்தார்.

நாயர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் சட்டசபை ஸ்தானங்கள் கொடுக்கவேண்டும்; பிறகு சில ஸ்தானங்கள் ஈழவருக்கும் தரலாம் என்று மன்னம் கூறினார்.

தான் விரும்பினால் சிலரை சட்டசபைத் தேர்தலுக்கு நிறுத்தி வைக்க முடியும் எனவும் வெற்றியோ தோல்வியோ பிரச்சினையல்ல என்றும் ஆனால் தான் யாரிடத்திலும் பிச்சை கேட்கப் போவதில்லை என்றும் அவர் கூறினார்.

நல்ல அபேட்சகர்களையே நிறுத்த வேண்டும் என்றும் ஏதாவது போக்கிரிகளை நிறுத்தினால் இதற்குத் தானும் உடந்தையாக நிற்க முடியாது என்றும் நிலைமையை யோசிக்க வேண்டி நேரும் என்றும் அவர் கூறினார்.

ஆர். எஸ். பி., கே. எஸ். பி. கட்சிகள் கூட்டணியிலிருந்து விலகிச் சென்றது பற்றித் தம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்று அவர் கூறினார். தனக்கு எம்.எல்.ஏ., முதலமைச்சர் பதவியில் ஆசை இல்லை என்றும் இப்போதே முதலமைச்சரை விட உயர்ந்த அந்தஸ்தில் வாழ்வதாயும் அவர் ஜம்பமடித்துக் கொண்டார்.

கத்தோலிக்கப் பத்திரிகையான 'தீபிகை' தம்மைப் பற்றி ஏதேதோ எழுதியிருப்பதாகவும், இன்றும் கம்யூனிஸ்டுகளைப் பதவியில் கொண்டுவரப் பாதிரிமார் விரும்பினால் அதற்கும் வழிபுண்டு என்று பாய்ச்சல் காட்டினார். வாழ்நாள் முழுவதும் கம்யூனிஸத்தை ஒழிக்கவே அர்ப்பணித்திருப்பதாக அளந்தார். (ஜனயுகம்)

# கனரக எஞ்சினியரிங் தொழிற்சாலைகள் நிறுவ

## செக் நாடு இந்தியாவுக்கு கடன் உதவுகிறது

### புதுடெல்லியில் பேச்சுவார்த்தைகள்

புதுடெல்லி, நவ. 13—

இங்கு விஜயம் செய்துள்ள செக்கோஸ்லோவேகியா நாட்டு பொருளாதார தூதுக்குழுவினர் இந்தியாவில் கனரக எஞ்சினியரிங் தொழிற்சாலைகளை நிறுவ 25 கோடி ரூபாய் கடனுதவி அளிக்க முன்வந்திருக்கின்றனர். இந்தத் தொழிற்சாலைகள் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் நிறுவப்படலாம்.

இதைத் தவிர உபயோகப் பண்டங்களை உற்பத்தி செய்யும் நடுத்தரமான தொழிற்சாலைகள் நிறுவ 5 கோடி முதல் 8 கோடி ரூபாய் வரையில் கடன் உதவுவதாயும் வாக்களித்துள்ளனர்.

ஏற்கனவே செக் நாடு வார்ப்புஉலை தொழிற்சாலை நிறுவ கடன் கொடுத்திருப்பது தெரிந்ததே.

கனரக எஞ்சினியரிங் தொழிற்சாலைகள் நிறுவும் திட்டம் வார்ப்பு ஆலைகளின் உற்பத்தி சக்தியைப் பெருக்கும் தொழில்களை நடத்தவும், கனரக மின்சாரத் தொழிற்சாலை அமைக்கவும், யந்திர தளவாட உற்பத்திச்சாலை நிறுவவும், கனரக உலைத் தொழிற்சாலை ஏற்படுத்தவும் நடவடிக்கை எடுக்கும்.

வட்டி விகிதம் இதர ஷரத்துகள் பற்றிப் பேச்சுவார்த்தைகள் நடந்து வருகின்றன.

இங்கு செக் நாட்டு தூதுக்குழுவுடன் இந்திய சர்க்கார் பேச்சுவார்த்தைகள் நடத்தி வருகிறது. அடுத்துச் சில நாட்களுக்குள் பேச்சுவார்த்தைகள் பூர்த்தியாகி உடன்பாடு ஏற்பட்டுவிடும்.

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

டத்தை நிறைவேற்றுவதற்கு சோவியத் மக்களுக்கே ஏராளமான நிதி தேவைப்படுகிறது. முன்பு பின்தங்கிய நாட்டின் நிலையிலிருந்த தமது நாட்டை உலகின் முக்கிய தொழிலியல் அரசுகளில் ஒன்றாக உயர்த்துவதற்கு அவர்கள் அரும்பாடுபட வேண்டியிருந்தது.

இந்தியா உட்பட எல்லா பின்தங்கிய நாடுகளுக்கும் சகோதர உதவி அளிப்பது தமது கடமை என்று சோவியத் மக்கள் கருதுகின்றனர்.

இந்தியாவின் பொருளாதாரம் வளர்ந்தோங்கி, இந்திய மக்கள் சுபீட்ச வாழ்வு பெறுவதாகுக! சோவியத்-இந்திய பொருளாதார ஒத்துழைப்பு மேலும் வளர்ந்தோங்கி, இந்தியாவின் சுயேச்சை நிலை வலுப்பெறுவதாகுக!

# சென்னையில் பாதாள சாலைகள் அவசியம்

## பெரிய சாலைகள் விஸ்தரிக்கப்பட வேண்டும்

### போலீஸ் கமிஷனரின் 1 கோடி ரூபாய் திட்டம்

சென்னை, நவ. 13—

சென்னை நகரில் வண்டிப் போக்குவரத்துப் பிரச்னையைச் சமாளிக்க ஒரு கோடி ரூபாய் செலவில் திட்டமொன்றை போலீஸ் கமிஷனர் திரு. ஆர். எம். மகாதேவன் இன்று நிருபர்களிடம் விளக்கினார். அத்திட்டம் போக்குவரத்து சப்-கமிட்டியிடம் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

கமிஷனர் கூறியதாவது:

சென்னை நகரில் போக்குவரத்து அபிவிருத்தி வேலையைக் கவனிக்க தனி இஞ்ஜினீயரிங் குழு ஒன்று அவசியம்.

நகரிலும் நகரை சுற்றிலும் பல தொழிற்சாலைகள் தோன்றிவருவதால் போக்குவரத்து நெருக்கடி அதிகரிக்கும். எனவே விபத்துக்களைத் தடுக்க திட்டமொன்று அவசியம். மவுண்ட்ரோடு, பூந்தமல்லி ஹைரோடு, மரீனா, சுபாஷ் சந்திரபோஸ் ரோடு முதலிய சாலைகளை விஸ்தரிக்க வேண்டும். இந்தப் பெரிய சாலைகளில் 4 தடங்கள் அல்லது வழிச் சந்துகள் ஏற்படுத்தப்பட வேண்டும்.

சென்னை நகரில் சைக்கிள்களைத் தவிர மெதுவாகச் செல்லும் வண்டிகளுக்குத் தடை விதிக்க வேண்டிய காலம் வந்துவிட்டது.

பெரியசாலைகளில் பாதாள வழிகளோ அல்லது அவற்றின் வழியாகப் பாதசாரிகள் நடக்க வேண்டுமென்றோ வேண்டிய இடங்களில் சந்திக்கும் மூன்று சாலைகளிலும் பாதாள வழிகள் அவசியம். ஜனநெருக்கமுள்ள பகுதிகளில் மோதிரம் போன்ற வளைந்த சாலைகள் சுற்றிலும் போடவேண்டும். இதனால் ஜனநெருக்கமுள்ள சாலைகளை மக்கள் கடக்க வேண்டியின்றி வளைந்து சுற்றிச் செல்லும் சாலைகளில் நடக்கலாம்.

# சிந்தாதிரிப்பேட்டையில் பாலதண்டாயுதம் மன்றம் துவக்கவிழா

சென்னை, நவ. 12—

சென்னை காங்கிரஸ் சர்க்காரால் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு சிறையில் வாடிக்கொண்டிருக்கும் தோழர் பாலதண்டாயுதத்தின் பேரால் சிந்தாதிரிப் பேட்டையில் 10-11-59 ல் காலை 10 மணிக்கு ஓர் மன்றம் துவக்கப்பட்டுள்ளது. மன்றத் தலைவர் தோழர் வி. எம். அப்துல் காதர் கொடியேற்றி வைத்தார். மன்றச் செயலாளர் தோழர் கே. எஸ். பால் குழந்தைகளுக்கு மிட்டாய் வழங்கினார். மாலைப் பொதுக் கூட்டத்தில் தோழர்கள் என். லோகநாதன், வி. பி. சிங்கன் ஐ. மாயாண்டிபாரதி ஆகியோர் பேசிய பின், 'அரசியல் கைதிகளை விடுதலை செய்யுமாறு பலத்த கரகோஷத்திற்கிடையே ஓர் தீர்மானம் நிறைவேறியது.

# திருச்செந்தூர் முருக தரிசனமும் மந்திரி பக்தவத்சலத்தின் செலவும்

## சொந்தப் பணமா? சர்க்கார் பணமா?

### என். சண்முகம் எம்.ஏ.பி.எல். அறிக்கை

பாளையங்கோட்டை, நவ. 12—

உணவமைச்சர் திரு. பக்தவத்சலம் பாளையங்கோட்டையில் 4-11-59-ல் தங்கிவிட்டு திருச்செந்தூர் போவதாக பத்திரிகைகளில் வெளிவந்த செய்திபற்றி பாளையங்கோட்டை அட்வகேட் திரு. என். ஷண்முகம் எம்.ஏ. பி எல் அவர்கள் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்.

**சொந்தக் காரியத்துக்காக மந்திரி வந்தார்**

"திருச்செந்தூரில் மந்திரி கவனிக்கவேண்டிய தலைபோகிற காரியம் ஒன்றுமில்லை. மந்திரிகள்தங்கள் சொந்த ஜோலிக்காக, எம். எல். ஏ. வீட்டுக் கல்யாணத்துக்காக, கோவில்தரிசனம் பார்ப்பதற்காக, குற்றாலம் சீஸனை அனுபவிப்பதற்காக, கன்னியாகுமரி வாசம் செய்வதற்காக, ஏதோ சாக்குப்போக்காக பெயரளவில் சர்க்கார் ஜோலியையும் போட்டுக்கொள்வது வழக்கமாகிவிட்டது.

மந்திரி வரும்போது ஜில்லா அதிகாரிகள் அத்தனைபேரும், பழைய காலத்தில் கவர்னர்களுக்குப் பின்னால் அலைந்தது மாதிரி, தங்களுடைய அன்றாட வேலையைக் கவனிக்க முடியாமல் மந்திரிக்குப் பின்னால் அலைய வேண்டிய நிர்ப்பந்தமிருக்கிறது.

**விவசாயிகள் படும்பாடு**

தூத்துக்குடி ஆர்.டி.ஓ. கோர்ட்டில் சுமார் 100 விவசாயிகள்மீது கடந்த 4 மாதகாலமாக கேஸ் நடந்துகொண்டிருக்கிறது. ஒவ்வொரு வாய்தாவுக்கும் அத்தனை ஏழை விவசாயிகளும் 20 மைல் நடந்து, கட்டுச்சோறு கட்டிக் கொண்டு வருகிறார்கள். ஜாமீன் வழக்காக இருந்தபோதிலும் எல்லா எதிரிகளும் வரவேண்டியிருக்கிறது. மந்திரிகள் அடிக்கடி வருவதால் (பக்தவத்சலம் இங்கு வந்த நவ. 4-ம் தேதி உட்பட) இந்த வழக்குகள் வாய்தா போடப்படுகிறது. இதனால் பலருக்குத் தொல்லை.

**சாமி கும்பிட வந்தார்**

நவ. 4ல் ஸ்ரீமான் பக்தவத்சலம் இங்கு வந்தது படி அரிசி விலையை ரூ. 1-2-0 விலிருந்து 12 அணா ஆக்க அல்ல பெரும் நிலச்சுவான்தார்களிடமிருந்து நெல் கொள்முதல் பண்ணவும் அல்ல. நியாய விலையில் சீனி கொடுக்கவும் அல்ல.

திருச்செந்தூர் (கந்தஷஷ்டி) முருகனை தரிசனம் செய்வதற்காகத்தான் வந்தார். மந்திரியினுடைய திருச்செந்தூர் விஜயத்துக்காக போலீஸுக்குச் செலவு, தாசில்தார், கலெக்டர் நிர்வாகத்துக்குச் செலவு. இவைகள் மக்கள் பணம்தானே?

முருகன் தரிசனத்துக்காக மந்திரிகள் திருச்செந்தூர் போகும் செலவு, சர்க்கார் செலவா? அல்லது அவரது சொந்தப் பணமா? சர்க்கார் பணமாயிருந்தால், மந்திரியின் நடத்தை யோக்கியமானதா? இதை திருச்செந்தூர் முருகன்தான் விரும்புவாரா?

# தமிழகத்தில் உணவு விலைக் குறைப்பு இயக்கக் கூட்டங்கள்

**நாங்குநேரி**

வள்ளியூர், நவ. 9—

நாங்குநேரித் தாலூகா சர்வ கட்சிப் பிரதிநிதிகள் கூட்டம் வள்ளியூரில் 9-11-59 அன்று நடைபெற்றது. உணவு இயக்கம் பற்றி சர்வ கட்சிக் கூட்டணி அமைப்பதன் அவசியத்தை தாலூகா கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் வி. எஸ். காந்தியும், தி. கே. செயலாளர் ஜி. ஏ. துரையும் விளக்கப் பேசினார்கள் பிறகு விலைவாசி உயர்வு எதிர்ப்பு சர்வ கட்சிக் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. தி. மு. கழகம் சார்பில் எஸ். என். எம். முகமது அலி, ஜி. ஏ. துரை சின்னு, விவசாய சங்க சார்பில் ஆர் சாமிதாஸ், பி. எம். மாணிக்கம், எஸ் பால்ராஜ், கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் வி. எஸ். காந்தி, எம். சொக்கலிங்கம், எஸ். தாமோதரன் ஆகியவர்கள் கமிட்டி உறுப்பினர்களாகவும், வி எஸ். காந்தியும், ஜி. ஏ. துரையும் கமிட்டியின் கூட்டுச் செயலாளர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திருக்குறுங்குடியில் நவம்பர் 15-ம் தேதியிலும் பண முடியில் நவ 16, கன்னிகுளத்தில் நவ 17, களக்காட்டில் நவ. 18, திசையன் விளையில் நவ. 19, நாங்குநேரியில் நவ. 20 ஏர்வாடி—நவ. 21, வள்ளியூர் 22லும் உணவு இயக்கப் பொதுக் கூட்டங்கள் நடத்துவது என முடிவு செய்யப்பட்டது.

**நன்னிலம் தாலூகா**

நன்னிலம் தாலூகா விவசாய தொழிலாளர் சங்க கமிட்டிக் கூட்டம் பி. அப்பாசாமி தலைமையில் 7-11-59 அன்று நடைபெற்றது.

அதிகமாக உயர்ந்து கொண்டு போகும் உணவு தானிய விலைவாசியைக் கட்டுப்படுத்தி படி அரிசி 12 அணாவுக்கு மக்களுக்குக் கிடைக்கும்படி செய்ய சர்க்கார் முன்வர வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

உணவு விலைவாசி எதிர்ப்பு சர்வகட்சிக் கூட்டணியின் நடவடிக்கைக்கும் ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

**பேரளத்தில்**

10-11-59 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு சாம்பசிவம் தலைமையில் உணவு விலைவாசி எதிர்ப்பு இயக்கப் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

**மன்னார்குடி**

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி மன்னார்குடி தாலுகாக் கமிட்டியின் சார்பில் 8—11—59 அன்று மாலை 6 மணிக்கு தேரடி மைதானத்தில் டி. ஆறுமுகம் தலைமையில் உணவு இயக்கப் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

தஞ்சை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி எம். காத்தமுத்து, ஆர். தங்கராஜ் ஆகியவர்கள் இப்போது உணவு தானிய விலைவாசி விஷம் போல் உயர்ந்துகொண்டு போவது பற்றியும், சர்க்கார் மௌனம் சாதிப்பதன் மர்மம் என்ன என்றும், இதை எதிர்த்து சர்வகட்சிகளும் போராட வெண்டியதன் அவசியத்தையும் விளக்கிப் பேசினார்கள்.

**குமரி மாவட்டத்தில்**

திக்கணங்கோட்டில் 8-11-59 மாலை 6 மணிக்கு டி. மணி தலைமையில் கம்யூனிஸ்ட் அனுதாபிகள் சங்கத்தின் சார்பில் உணவு இயக்கப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. டி. முத்து, வி. குமாரதாஸ் பி.ஏ. ஆயோர்கள் கூட்டத்தில் பேசினார்கள்.

**இரணியில்**

6-11-59 மாலை 7 மணிக்கு இரணியில் மேலக்கடை வீதியில் கே. ஜனார்த்தனம் தலைமையில் உணவு இயக்கப் பிரச்சாரகூட்டம் நடைபெற்றது. என். பத்மநாபன் பி. திவாகரன், எஸ். எஸ். குட்டி ஆகியோர்கள் உணவு விலைவாசி உயர்வை எதிர்த்துப் பேசினார்கள்.

7-11-59 இரணியில் செக்காலத் தெருவில் நடைபெற்ற உணவு இயக்கப் பொதுக் கூட்டத்தில் பி. திவாகரன், ஜனார்த்தனம் ஆகியோர் பேசினார்கள்.

8-11-59 அன்று ஒருப்பரையில் நடந்த உணவு இயக்கப் பொதுக் கூட்டத்தில் எஸ். எஸ். குட்டி பி. திவாகரன், ஜனார்த்தனம் ஆகியவர்கள் பேசினார்கள்.

**ஜம்பையில்**

பவானி தாலூகா ஜம்பையில், கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில்

**உணவு இயக்க சர்வகட்சிக் கமிட்டி அமைக்கப்பட்டது**

திருத்துறைப்பூண்டி, நவ. 10—

9-11-59 தேதி திங்கட்கிழமை காலை 11 மணிக்கு கம்யூனிஸ்ட் கட்சி பாண்டிகிளைக் காரியாலயத்தில் விலைவாசி உயர்வு எதிர்ப்பு முன்னணி அமைப்புக்கூட்டம் திரு. சாம்பசிவம் (தி. மு. க.) தலைமையில் நடைபெற்றது.

இக்கூட்டத்தில் கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், விவசாயிகள் சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் சுமார் 100 பேர் கலந்து கொண்டனர்.

வி. பழனிவேல் (வி. தொ. ச. ந. காரியதரிசி) டி.எஸ். கல்யாணசுந்தரம் (தி. மு. க.) இரா. சுந்தரேசன் (தி. மு. க.) வை. பாண்டியன் (கம்யூனிஸ்ட் கட்சி) ஆகியோர்கள் விலைவாசி உயர்வையும், சர்க்காரின் பிற்போக்குக் கொள்கையையும் கண்டித்துச் சொற்பொழிவாற்றினர். முதலமைச்சர் காமராஜரிடம் இதுசம்பந்தமாய்க் கொடுக்கப்பட்ட மகஜரும் வாசித்து ஏகமனதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. விலைவாசி உயர்வு எதிர்ப்பு முன்னணிக்கு இரா. வை. சுந்தரேசன் (தி. மு. க.), பாண்டியன் (கம்யூனிஸ்ட்) ஆகியவர்கள் கூட்டுக் கன்வீனர்களாகவும் திருவேங்கடம், சாம்பசிவம் கிருஷ்ணசாமி, முருகையன், மணி, சண்முகம், வீரையன், சிங்காரு, தனுஷ்கோடி, வீராசாமி, சுப்ரமண்யம், ஆறுமுகம், சந்தையன் ஆகியோர்கள் செயற்குழு உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நவம்பர் 15-ம் தேதி முதல் 22-ம் தேதிக்குள் உணவு இயக்கக் கூட்டங்கள் நடத்துவது எனவும் முடிவு செய்யப்பட்டது.

# ஐ. நா. பொதுச்செயலாளர் லாவோஸ் சேர்ந்தார்

வியன்டியன், நவ. 13—

ஐ. நா. பொதுச் செயலாளர் ஹாமர்ஷோல்டு நேற்று இங்கு வந்து சேர்ந்தார். லாவோஸ் பிரச்சினைக்குத் தீர்வுகாண்பது ஐ நா. வின் கடமை என்று அவர் கூறினார்.

**உணவு விலைவாசி உயர்வைக் கண்டித்துக் கூட்டம்**

உணவு விலைவாசி உயர்வைக் கண்டித்துக் கூட்டம் நடைபெற்றது.

எஸ். பெருமாள் கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

ஓம்பை பஞ்சாயத்து போர்டு தலைவர் முகமது இப்ராஹிம் உணவு விலைவாசி உயர்வைக் குறைக்கும் முறையில் பஞ்சாயத்து எடுத்துவரும் நடவடிக்கைகளை எடுத்துக் கூறினார்.

வெங்கடாசலம், உணவு விலைவாசி உயர்வை ஏற்படுத்த பெரும் முதலாளிகள் செய்யும் சதியை விளக்கிச் சொற்பொழிவாற்றினார்.

பாவானி ஷண்முகம் உணவு இயக்கம் பற்றியும், சர்வகட்சி கூட்டணி பற்றியும் விரிவாகப் பேசினார்.

**திருப்பூரில் உணவு இயக்கம்**

திருப்பூரில் 1, 2, 3, 4 5, 6, 10, 11 வார்டுகளில், உணவு விலைவாசியைக் கண்டிக்கும் முறையில் ஊர்வலங்கள் நடத்தப்பட்டன.

13, 14-வது வார்டுகளில் உணவு விலைவாசி உயர்வைக் கண்டித்து ஊர்வலங்களும், பொதுக் கூட்டங்களும் நடத்தப்பட்டன.

7, 8, 9, 15 வார்டுகளில் இதே போன்று ஊர்வலங்கள் நடத்தப்பட்டன.

16 17 வார்டுகளில் 6, 7, 8 தேதிகளில் ஊர்வலங்களும், பொதுக்கூட்டங்களும் நடந்தன.

இதேபோன்று 18 19, 20, 21, 25 26, 27 வார்டுகளிலும் உணவு விலையேற்ற எதிர்ப்புக் கூட்டங்கள் நடத்தப்பட்டன.

8-11-59 திருப்பூர் அறுப்பப் பாளையம் பாத்திரத் தொழில் சங்கத்தின் சார்பில் ஏ. கணபதி அவர்கள் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் என். கே. பழனிச்சாமி எம். எல். ஏ., ஏ. கணபதி ஆகியவர்கள் உணவு இயக்கம் பற்றிப் பேசினார்கள்.

**பள்ளிப்பட்டி**

கரூர் தாலுகா பள்ளிப்பட்டியில் 1-11-59ல் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர் பி. ஆர். அப்துல் கரீம் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சேலம் ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் ஜி. சாமுவேல் உணவு இயக்கம் குறித்துப் பேசினார். உணவுவிலை விஷம் போல் ஏறிவரும் நேரத்தில் காங்கிரஸ் அரசாங்கத்தினர் கைகட்டி சும்மா இருப்பது கண்டிக்க தக்கதென்றார். அடுத்து தோழர் ஜி. இஸ்மாயில் பேசினார். கடைசியில் தோழர் டேப் சடையப்பன் குழுவினரின் பாட்டுடன் கூட்டம் முடிந்தது.

கூட்டத்தில் நியாய விலைக் கடை திறக்கக் கோரியும், படி அரிசி 12 அணாவுக்கு கொடுக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. (ந. நி.)

**கலா நிகழ்ச்சி**

தேனி, நவ. 10—

தேனி ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் சார்பில் டேப் காளிமுத்து குழுவினரின் கலா நிகழ்ச்சி சமீபத்தில் நடைபெற்றது. எஸ். ராமையா தலைமை வகித்தார். பவுஸ் வீராச்சாமி எஸ். ஒச்சப்பத்தேவர் அப்துல் ரஹ்மான் முதலியோர் பேசினர். தோழர்கள் வெங்கடாசலம் கவிஞர் கல்யாணசுந்தரம் ஆகியோர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## இன்றைய சினிமா

அசோக்—கோடா பைசா
பாரத்—அபலை அஞ்சுகம்
பிரைட்டன்--மரகதம்
பிராட்வே—நவ்ரங்
காஸினோ—அவள் யார்?
சித்ரா—பாகப் பிரிவினை
கிரௌன்--பாகப் பிரிவினை
ஈராஸ்—உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்
கெயிட்டி—அபலை அஞ்சுகம்
காமதேனு—தெய்வமே துணை
கபாலி—கல்யாணப் பரிசு
கிருஷ்ணா—தெய்வமேதுணை
லக்ஷ்மி—வீரபாண்டிய கட்டபொம்மன்
மஹாலக்ஷ்மி—அபலை அஞ்சுகம்
மஹாராணி—அவள் யார்?
மிட்லண்ட்—நவ்ரங்
மினர்வா—Count your Blessings
நியூ க்ளோப்—Hercules
நியூ எல்பின்ஸ்டன்— The Young Philadelphians
ஓடியன்—Vertigo
பிளாஸா—சோடி பேஹன்
பத்மனாபா—ராணி ரூபமதி
பாரகன்—கண் திறந்தது
பிரபாத்--கண் திறந்தது
ராஜகுமாரி—சபாஷ் மீனா
ராக்ஸி—அவள் யார்?
செலக்ட்—சுஜாதா (ஹிந்தி)
சரஸ்வதி—கண் திறந்தது
சயானி--பாகப் பிரிவினை
ஸ்டார்—ஜால் சாஸ்
சன்—கல்யாணப் பரிசு
தங்கம்-ஓடி விளையாடு பாப்பா
திருமகள்—நர்டோடி மன்னன்
உமா-தெய்வமே துணை
வீனஸ்—கல்யாணப் பரிசு
வெலிங்டன்—மரகதம்
தாம்பரம் : G. R. தியேட்டர்-- நாலு வேலி நிலம்
அரக்கோணம் : கற்பகம்-- ராஜசேவை



# பிரதமர் நேருவின் 70-வது பிறந்த தினம்

## உலகத் தலைவர்களின் வாழ்த்துக்கள்

புதுடில்லி, நவ. 14—இந்தியப் பிரதமர் பண்டித நேருவின் பிறந்த நாளையொட்டி உலகத் தலைவர்கள் பலர் நேருவிற்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளார்கள். எழுபதாவது வயதை எய்தும் நேருவை வாழ்த்தி சோவியத் பிரதமர்நிகிதா குருஷ்சேவ் வாழ்த்து [illegible] வித்துள்ளார்.

அவர் தமது வாழ்த்துச் செய்தியில் 'எழுபதாவது ஆண்டை எட்டிப் பிடிக்கும் தங்களுக்கு எனது இதய பூர்வமான நேசபூர்வமான வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். காலனி ஆதிக்கத்திலிருந்து இந்திய மக்களை விடுவிப்பதில் நீங்கள் ஆற்றிய அரும் தொண்டையும், சமாதான சகவாழ்வின் அடிப்படையில் நாடுகளிடையே ஒத்துழைப்பும், நிலவுவதற்காக நீங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும் சோவியத் யூனியன் உயர்ந்த அளவில் மதிக்கிறது என்பதை மீண்டும் ஒரு முறை கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்தியாவிற்கும் சோவியத் யூனியனுக்கும் நேச உறவு வளர்வதில் தாங்கள் பெரும் அக்கரை எடுத்துக் கொண்டீர்கள் என்பதை சோவியத் மக்கள் உணருகிறார்கள். உலக சமாதானத்தின் நலன் கருதியும், இருநாட்டு மக்களின் நலன் கருதியும் எதிர்காலத்தில் மேலும் இரு நாட்டு அரசாங்கங்களுக்கிடையே நட்புறவும், சகோதர ஒத்துழைப்பும் வளரும் என்று நம்புகிறேன். தாங்கள் உடல் நலத்தோடு மகிழ்வோடு வாழ வாழ்த்துகிறேன்'' என்று கூறியுள்ளார்.

### இந்தோனேஷியா

இந்தோனேஷிய மக்களின் சார்பில் குடியரசுத் தலைவர் டாக்டர் சுகர்ணோ வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ளார். இங்கிலாந்து முதலமைச்சர் மாக்மில்லனும் நேருவை வாழ்த்தியுள்ளார்.

### கிழக்கு ஜெர்மன்

கிழக்கு ஜெர்மன் குடியரசின் முதலமைச்சர் ஹெர் ஹாட்டோக்ரோட்வால் நேருஜியின் தலைமையில் இந்திய மக்கள் இந்தியாவைப் புனர் நிர்மாணம் செய்திருக்கிறார்கள்'' என்று வாழ்த்தியுள்ளார் கிழக்கு ஜெர்மன் பிரச்சினையை நேரு நன்கு உணர்ந்திருக்கிறார் என்றும் அச் செய்தியில் கூறியிருக்கிறார்.

''நியாயமான சமாதானபூர்வமான ஒரு உலக அமைப்பு உருவாவதற்கு நீங்கள் உங்கள் வாழ்வையே தியாகம் செய்திருக்கிறீர்கள்'' என்று அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவர் நேருவை வாழ்த்தியுள்ளார்.

ஐக்கிய அரபுக் குடியரசுத் தலைவர் நாசர், கனாவின் முதலமைச்சர் என்க்ருமா ஆகியோரும் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியுள்ளனர்.

ஈராக் பிரதமர் அப்துல் கரீம் காசிம் 'ஒரு சில சொற்களால்' நேருவைப் பாராட்ட முடியாது என்று தமது செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

### டாக்டர் ராதாகிருஷ்ணன்

''நேரு இந்திய மக்களின் குரல் அரசியல் எதிரத் தன்மையின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். சமுதாய மாற்றத்திற்கும், ஜனநாயகத் திட்டங்களுக்கும், உலக சமாதானத்திற்கும் உறுதுணையானவர்'' என்று இந்திய உதவிக் குடியரசுத் தலைவர் வாழ்த்தியுள்ளார். இந்தியக் குடியரசுத் தலைவர் நேருவை பலபடப் புகழ்ந்து பாராட்டியுள்ளார்.

## திபேத்தில் நிலப்பிரபுக்கள் நிலம் விவசாயிகளுக்குப் பங்கிடப்படுகிறது

பீகிங், நவ. 13—திபேத்தில் பெரும்பாலும் பெரிய நிலப்பிரபுக்களுக்கும் லாமா மடங்களுக்கும் சொந்தமாகவுள்ள நிலங்களை விவசாயிகளுக்குத் திரும்ப வினியோகம் செய்ய வேண்டிய தருணம் வந்துவிட்டது, என்று சீனக் கம்யூனிஸ்ட் கட்சியின் திபேத் பிரதேசக் கமிட்டி முடிவு செய்துள்ளதாக இன்று இங்கு தெரிவிக்கப்பட்டது.

3½ வாரமாக நடைபெற்ற மேற்படி கமிட்டியின் கூட்டத்தில் இம்முடிவு எடுக்கப்பட்டது. இக்கூட்டம் அக். 18-ல் முடிவடைந்தது, என்று பீகிங் பீபிள்ஸ் டெய்லி கூறியது.

## சீன-இந்திய எல்லைத் தகராறு பற்றி அமெரிக்க வெளி விவகார மந்திரி

வாஷிங்டன், நவ. 13—சீன-இந்திய எல்லைத் தகராறில் இந்தியாவின் பக்கமே நியாயமிருப்பதாக அமெரிக்க சர்க்கார் கருதுவதாக அமெரிக்க வெளிநாட்டு விவகார மந்திரி கிறிஸ்டியன் ஹெர்டர் நேற்று செய்தி நிருபர்களிடம் தெரிவித்தார்.

சீனர் இந்த எல்லைத் தகராறில் பலாத்காரத்தை உபயோகித்துள்ளன ரென்றும் அவ்வித நடத்தை தவறு என்றும் ஹெர்டர் கூறினார்.

இந்த எல்லைத் தகராறால் இந்தியாவிற்கு அமெரிக்க பொருளாதார உதவி எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டாதென்றும் அமெரிக்க வெளிநாட்டு விவகார மந்திரி கூறினார்.

## மத்திய துணை மந்திரிக்கு ஆப்பரேஷன்

கல்கத்தா, நவ. 13—இன்று காலை எஸ். எஸ். கே. எம். ஆஸ்பத்திரியில் மத்திய துணை நிதி மந்திரி திரு. பகத்துக்கு குடல் பிதுக்க ஆப்பரேஷன் வெற்றிகரமாக நடந்தது. மந்திரியின் நிலை திருப்திகரமாயிருக்கிறது.

# குழந்தைகள் நாட்டின் செல்வங்கள்

## ஜனாதிபதி ராஜேந்திரப் பிரசாத் ஆசிச்செய்தி

புதுடில்லி, நவ. 12—கடந்த ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட குழந்தைகள் தினம் வெகுவாக முன்னேற்றம் அடைந்திருப்பதாகவும், அது ஒரு தேசியத் திருநாளாகப் பரிணமிக்கும் என்று தான் நம்புவதாகவும் இந்திய ஜனாதிபதி டாக்டர் ராஜேந்திர பிரசாத் குறிப்பிட்டுள்ளார்.

குழந்தைகள் தினத்தை ஒட்டி, அகில இந்திய ரேடியோவில் ஒலி பரப்பப்பட்ட ஆசிச் செய்தியில் ஜனாதிபதி இவ்வாறு கூறியுள்ளார்.

மேலும் அவர் பேசுகையில் நாட்டின் செல்வாதாரம் நம் குழந்தைகளே, அவர்களின் வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு வேண்டிய முயற்சிகள் கைக்கொள்ளப்பட வேண்டும், அவர்களின் கல்வித்தரம் உயர்வதற்கும், அவர்களை நல்ல முறையில் வளர்ப்பதற்குமான முயற்சிகள் கைக்கொள்ளப்பட வேண்டும்,விக்கதியான குழந்தைகளைப் பொறுத்தமட்டில் விசேஷ கவனம் செலுத்தப்பட வேண்டும் என்றார்.

இந்த ஆண்டின் முக்கியசேவை என்னவெனில் சரியான முறையில் கல்வி போதிக்கப்படாத குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கப்படவேண்டும்; அனாதைக் குழந்தைகளும்; கைவிடப்பட்ட மனைவிகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்று குறிப்பிட்டார்.

இந்த ஆண்டு கொண்டாடப்படும் குழந்தைகள் தினம் குழந்தைகள் வளர்ப்பில் மேலும் ஒரு படி முன்னேறியதாக இருக்க வேண்டுமென்று ஆசி கூறியுள்ளார்.

## பிரபல சோவியத் அணுவியல் விஞ்ஞானிகள் அமெரிக்காவிற்கு புறப்பட்டனர்

மாஸ்கோ, நவ. 12—பிரபல சோவியத் அணுவியல் விஞ்ஞானிகளைக் கொண்ட தூது கோஷ்டி ஒன்று இன்று மாஸ்கோவிலிருந்து அமெரிக்காவிற்குப் புறப்பட்டது. அமெரிக்க அணுசக்திக் கமிஷனின் தலைவர் ஜான் மெக்கோனின் தலைமையில் அண்மையில் சோவியத் யூனியனுக்கு ஒரு அமெரிக்க விஞ்ஞானிகள் கோஷ்டி வருகை தந்ததை அடுத்து, மேற்படி சோவியத் கோஷ்டியினர் அமெரிக்காவிற்குச் செல்லுகின்றனர்.

சோவியத் தூதுகோஷ்டியில் பேரவை விஞ்ஞானிகள் அந்தோலி அலக்சாண்டிரோவும், ஆந்திர போச்வாரும், விலாதிமிர் வெக்ஸ்லெரும் மற்றும் பலரும் இடம் பெற்றுள்ளனர். இத்தூது கோஷ்டியின் தலைவர் பேராசியர் வாசிலி எமெலியானோவ் ஆகும் இவர் சோவியத் மத்திய அணுசக்திக் குழுவின் தலைவராவார்.

## பல லட்சம் பெறுமான தங்கம் கைப்பற்றப்பட்டது

டாக்கா, நவ. 12—கராச்சி, லாகூர், டாக்கா ஆகிய இடங்களில் போலீஸார் நடத்திய சோதனை காரணமாக பல லட்சம் பெறுமான தங்கம் கைப்பற்றப்பட்டது.

இந்த கள்ளக்கடத்தலில் ஈடுபட்டதாகச் சந்தேகப்பட்ட பலர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

குறிப்பிட்ட அளவு இந்திய செலாவணியும் கைப்பற்றப்பட்டது. சந்தேகப்பட்ட வியாபாரிகள் உட்பட சிலர் பாக் எல்லையைக் கடந்து விட்டதாகத் தெரிகிறது.

## ஜனவரியில் நாசர் இந்தியா வருவார்

கெய்ரோ, நவ. 13—தனது இந்திய விஜயத்தை ஜனவரி மத்திய பகுதிக்குமேல் ஜனாதிபதி நாசர் தள்ளிவைப்பார் என்று இராஜாங்க வட்டாரங்களில் இன்று கூறப்படுகிறது. இதற்கிடையில் ஜனாதிபதி ஐசன்ஹோவர் தனது ஆசிய விஜயத்தின்போது ஜனாதிபதி நாசரை சந்திப்பார் என்றும் அவ்வட்டாரங்கள் கூறுகின்றன.

# மந்திரி பந்த் முன்னால் மாணவர்கள் ஆர்ப்பாட்டம்

## ஒரிஸா-பீஹார் எல்லைத் தகராறு எதிரொலி

### போலீசார் கண்ணீர்ப் புகைப் பிரயோகம்

கட்டாக், நவ. 13—மத்திய சர்க்கார் உள் விவகாரத் துறை மந்திரி கோவிந்த வல்லப பந்த் முன்னால் ஆர்ப்பாட்டம் நடத்திய மாணவர்கள் மீது இன்று போலீசார் கண்ணீர்ப் புகை பிரயோகம் செய்தனர். பதினைந்து பேர் காயமுற்று ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றார்கள்.

'பண்டித் பந்தே திரும்பிப் போ'—பீஹாரிலுள்ள சாரிகலா ஹரஸ்வான் பகுதிகளை ஒரிஸாவுக்குக் கொடு என்று மாணவர் உள்ளிட்ட பொதுமக்கள் கோஷமிட்டனர். சிலர் பந்த் சென்ற கார் முன் படுத்து மறியல் செய்ததாயும், வேறு சிலர் கற்களை எறிந்ததாயும் கூறப்படுகிறது.

ஒரிஸா-பீஹார் எல்லைத் தகராறின் எதிரொலியாகவே இந்த நிகழ்ச்சி நடந்துள்ளது.

பாரபாதிஸ்டேடிய மைதானத்தில் நடந்த கூட்டத்தில் பந்த் பேசினார். அவர் பேசும்போதே போலீஸ் அடக்கு முறை ஒழிக! என்ற கோஷம் எழுந்தது. விரைவில் பேச்சை முடித்துக் கொண்டு பந்த் ஒரிஸா முதலமைச்சர் மெஹதாபுடன் வெளியேறினார் என்று தெரிகிறது ஆர்ப்பாட்டம் நடத்தியவர்களை சீன ஆதரவாளர்கள் என்று பந்த் அவதூறு செய்தாராம்.

## போலீஸ்காரர்கள் மூவருக்கு 5 வருட தண்டனை

பம்பாய், நவ. 13—ஒரு பெண்ணிடம் ரூ. 278ஐ களவாடிய ஒரு வழக்கில் மூன்று போலீஸ்காரர்களுக்கு இன்று மொத்தமாக ஐந்து வருட கடுங்காவல் தண்டனை விதித்து பம்பாய் அடிஷனல் செஷன்ஸ் நீதிபதி திரு. பி. சி. வாகில் இன்று தீர்ப்புக் கூறினார்:

இப் போலீஸ்காரர்கள் மதுவிலக்கு இலாகாவைச் சார்ந்தவர் பக்கத்து ரயில்வே நிலயத்திலிருந்து அப்பெண் வீட்டிற்குத் திரும்பிக்கொண்டிருந்த வேளையில் இம்மூன்று போலீஸ்காரர்களும் அவளை தடுத்து களவாடியிருக்கின்றனர். அப்பெண்ணுடன் வந்த 12 வயது சிறுவனை அவர்கள் அடித்ததாகவும் குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது.

மேலும் அப்போலீஸ்காரர்கள் ரயில்வே நிலயத்தை நோக்கி ஓடும்போது பொதுமக்களால் பிடிக்கப்பட்டனர் என்றும் கோர்ட்டில் கூறப்பட்டது. போலீஸ்காரர்கள் மூவரும் குற்றவாளிகளென ஜூரிகள் முடிவு செய்தனர். —பி.டி.ஐ.

## உக்ரைனில் உருவாகும் உருக்கு உலை

### உலகிலேயே அதிக உற்பத்தித் திறனைப் பெற்றிருக்கும்

கார்க்கோவ், நவ. 13—உக்ரைனிய என்ஜினியர்களால் திட்டம் புனையப்பட்டுள்ள பிரம்மாண்ட உருக்கு உலை ஒன்று, ஒவ்வொரு தடவையும் 800 டன் உருக்கை உற்பத்தி செய்யும் ஆற்றலைப் பெற்றிருக்கும்.

அமெரிக்காவின் 540 டன் உருக்கு உலையின் வருடாந்திர உற்பத்தித் திறனை விடவும் சோவியத் யூனியன் 500 டன் உருக்கு உலையின் வருடாந்திர உற்பத்தித் திறனைவிடவும் இதன் திறன் 2½ மடங்கு அதிகமாக இருக்கும்.

மேலும் இந்தப் பிரம்மாண்ட உருக்கு உலைக்கான மூலதனச் செலவும், நடைமுறை உருக்கு உற்பத்திச் செலவும் மிகவும் குறைவானதாக இருக்கும், மிக உயர்ந்த அளவிற்கு சுய இயக்க அம்சங்களைப் பெற்றுள்ள இது உலகிலேயே மிகவும் அதிகமான உற்பத்தித் திறனுடையதாக விளங்கும்.

## உலக விவசாயக் கண்காட்சி

புதுடெல்லி, நவ. 13—டிசம்பர் 11-ந் தேதி யன்று இங்கு துவங்கவிருக்கும் உலக விவசாயக் கண்காட்சியில் 13 நாடுகளும் இரண்டு அகில உலக அமைப்புகளும் கலந்துகொள்கின்றன. ஆப்கானிஸ்தானம், பர்மா, சீனா, இலங்கை, கிழக்கு ஜெர்மனி, ஈரான், ஈராக், மங்கோலியா, பாகிஸ்தான், போலந்து, தென்வியட்னாம், அமெரிக்கா, சோவியத் யூனியன் முதலிய நாடுகள் இதிலடங்கும்.

## லாவோஸில் ஐ. நா. பொதுக்காரியதரிசி

வியன்டைன், நவ. 12—ஐ. நா. பொதுக்காரியதரிசி ஹாமர்ஷோல்ட் இன்று விமான மூலம் இங்கு வந்து சேர்ந்தார்.

இந்த சந்தர்ப்பத்தில் வியன்டைன் மாகாணத்தில் பெத்தல் லாவோஸ் இயக்கக்காரர்களின் நடவடிக்கை சிறிது இருந்ததாகத் தெரிகிறது.

இந்த வாரத்தின் தொடக்கத்தில் ஆறு ராணுவத்தினர் தாக்கப்பட்டுள்ளன.

ஐ. நா. பொதுக்காரியதரிசி லாவோஸ் புதிய மன்னரைச் சந்திப்பார்.

பிரதமர் [illegible]-யூ-சென்னனிக்கோனுடனும் பேச்சுவார்த்தை நடத்துவாரெனத் தெரிகிறது.

# கி. ஜெர்மனிக்கு விரோதமாக மே. பேர்லினில் வானொலி நிலையம்

## சோவியத் யூனியன் கண்டனம்

மாஸ்கோ, நவ. 14—மேற்கு ஜெர்மனியில் மேலும் ஒரு வானொலி நிலையம் அமைக்கப்படுவதற்கு சோவியத் யூனியன் அமெரிக்காவிற்கு எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறது.

அக்குறிப்பில் சோவியத் யூனியன் ''இன்றைய நிலைமையில் மேற்கு ஜெர்மன் அரசு மேலும் ஒரு வானொலி நிலயத்தை அமைப்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதல்ல, அங்ஙனம் வானொலி நிலயம் அமைப்பது சதிவேலைகளுக்கும், கலகப் பிரச்சாரம் செய்வதற்கும் தான் பயன்படும். கிழக்கு ஜெர்மன் குடியரசிற்கு விரோதமான பிரச்சாரம் செய்வதற்கே பயன்படுத்தப்படும், அதன் மூலம் மேற்கு ஜெர்மனி பெர்லின் பிரச்சினைக்கும், ஜெர்மன் பிரச்சினைக்கும் தீர்வு ஏற்படுவதில் தடங்கல் ஏற்படுத்த முயலுகிறது. ஐக்-குருஷ்சேவ் சந்திப்பால் ஏற்பட்ட நல்ல சூழ்நிலையையும், பெர்லின் பிரச்சினை சம்பந்தமாக பேச்சுவார்த்தை நடைபெறுவதற்காக ஏற்பட்ட சூழ்நிலையையும் மேற்கு ஜெர்மன் நடவடிக்கைகள் சீர்குலைக்கின்றன'' என்று கூறியுள்ளது.

இக்குறிப்பு பிரிட்டன், பிரான்சு ஆகிய அரசாங்கங்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளது. மேற்கு ஜெர்மனி டியூச்லான்டு பங்க் என்னுமிடத்தில் அவ் வானொலி நிலயத்தை அமைத்து வருகிறது.

## இலங்கை உபதேர்தலில் கம்யூ. கட்சி அபேட்சகர்

கொழும்பு, நவ. 13—இலங்கைத் தமிழரசுக் கட்சியின் தலைவர் சி. வன்னிய சிங்கம் காலமானதால் காலியான கோப்பாய் பார்லிமெண்ட் ஸ்தானத்திற்கு உபதேர்தல் நடக்க விருக்கிறது. ஸ்ரீமதி வன்னிய சிங்கம் (தமிழரசுக் கட்சி), எஸ். பி. நடராஜா (கம்யூனிஸ்ட்), எஸ். சிவசுப்ரமண்யம் (சுயேச்சை) முதலியோர் போட்டியிடுகின்றனர்.

## நேரு தன் பிறந்த நாளன்று டேராடூனில்

டேராடூன், நவ. 14—பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு இன்று தன்னுடைய 70வது பிறந்த நாளை, இங்கு சர்க்யூட் ஹவுசில் தன் மகள் இந்திரா காந்தி, சகோதரியின் மகள் திருமதி மேதா, தன்னுடையஇரண்டு பேரப் பிள்ளைகள் ஆகியோருடன் அமைதியாகக் கொண்டாடினார்.

அவரைப் பாராட்டி ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

## நடக்க இருப்பவை

### உணவு இயக்க சைக்கிள் ஊர்வலம்

15-11-59 ஞாயிறு காலை 8 மணிக்கு 1,73 பிராட்வே ஹார்பர் தொழிலாளர் சங்க அலுவலகத்திலிருந்து சைக்கிள் ஊர்வலம் சர்வ கட்சியின் சார்பில் புறப்படும்.

மயிலைத் தொகுதி உணவுப் பொருள் விலைக்குறைப்பு சர்வ கட்சிக் குழு சார்பில் 15-11-59 ஞாயிறு காலை 8 மணிக்கு அடையாறு ஈராஸ் தியேட்டர் அருகிலிருந்து சைக்கிள் ஊர்வலம்புறப்பட்டு முக்கிய வீதிகள் வழியாக வரும்.

### சர்வகட்சி ஊர்வலம்

15-11-59 ஞாயிறு காலை 8 மணிக்கு கோடம்பாக்கம் சர்வ கட்சி உணவு விலைக் குறைப்புக் குழுவின் சார்பாக ஊர்வலம் ஒன்று எம். ஜி. ஆர். திடலிலிருந்து புறப்படும்.

விலைவாசி உயர்வை எதிர்த்து 15-11-59 காலை 8-30 மணிக்கு தியாகராய நகர் சோமசுந்தரம் திடலிலிருந்து (6, ராஜா சாச்சார் தெருவிலிருந்து) திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தலைமையில் சர்வகட்சி ஊர்வலம் கிளம்பும்.

### பொதுக்கூட்டம்

15-11-59 ஞாயிறு மாலை 6 மணிக்கு கோடம்பாக்கம் வடபழனி பஸ் ஸ்டாண்ட் மைதானத்தில் திரு. பாலு தலைமையில் ம. பொ. சிவஞானம், புலவர் கீரன், வெங்கட்ராமன் பி. ஏ., மு. நாராயணன் ஆகியோர் பேசுவர். இசை தமிழரசு-ஜீவன்.

# பிரசுர விற்பனை இயக்கம்

## நவம்பர் மாதத்தில் இன்றுவரை ரூ. 6,500க்கு ஆர்டர்கள் வந்துள்ளன

சென்னை, நவ. 13—நவம்பர் பிரசுர விற்பனை இயக்கம் துவக்கத்தில் கொஞ்சம் மந்தமாக இருந்தாலும் இம்மாதம் 7 முதல் மிகவும் சூடு பிடித்திருக்கிறது. அரசியல் தத்துவார்த்த வரலாற்று நூல்களடங்கிய செட்டுகளே அதிகமாக விற்பனையாகின்றன. குறிப்பாக தமிழ் செட் நெ. 1, 3, 4, 5, 6, 8, 17 ஆகிய செட்டுகளும், ஆங்கிலம் செட் நெ. 3, 4, 12, 13, 14, 15 17 ஆகிய செட்டுகளும் அதிகப்படியாக விற்பனையாகின்றன.

பரவலாக தமிழகத்தின் எல்லா பகுதிகளிலிருந்தும் நமக்கு ஆர்டர்கள் வந்துகொண்டிருந்தாலும் ஒரு சில ஜில்லாக்களே இயக்கத்தின் முன்னணியில் நிற்கின்றன. குறிப்பாக கோயமுத்தூர் முதலாவதாகவும் அடுத்து தஞ்சை, திருச்சியும் இருக்கின்றன. இந்த இயக்கத்தில் தீவிரமாக பங்கெடுத்துக்கொள்ளும் மதுரை ஜில்லா இவ்வாண்டு மிகவும் பின்தங்கியிருக்கிறது. சென்னை ஜில்லாவும் பிரசுர விற்பனையில் அதிகப்படியான அக்கறை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதை வந்திருக்கும் ஆர்டர்கள் எடுத்துக் காட்டுகின்றன.

ஜில்லாவாரியாக நமக்கு இன்று வரை வந்திருக்கும் மொத்த ஆர்டர்களை கீழே தருகிறோம்.

| | ரூ. |
|---|---|
| கோயமுத்தூர் | 2,496 |
| தஞ்சாவூர் | 984 |
| திருச்சி | 932 |
| சேலம் | 617 |
| திருநெல்வேலி | 404 |
| மதுரை | 3 5 |
| சென்னை | 262 |
| செங்கற்பட்டு | 2 5 |
| நீலகிரி | 159 |
| கன்னியாகுமரி | 1 0 |
| வட ஆற்காடு | 11 |
| ஆக. மொத்தம் | 6,495 |

நவம்பர் பிரசுர இயக்கம் முடிவதற்கு கிட்டத்தட்ட ஒரு வாரமே இருக்கிறது. நமது அபிமானிகளும், ஏஜெண்டு நண்பர்களும், விற்பனையாளர்களும் இந்த இயக்கம் வெற்றிபெற நாமளித்துள்ள விசேஷ விலை சலுகையை பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டு தங்களின் ஊக்கமும் உற்சாகமுமிக்க ஒத்துழைப்பை தருவார்கள் என்று நம்புகிறோம், என என். சி. பி. எச். (பிரைவேட்) லிமிடெட் பதிப்பகத்தார் (6. நல்லதம்பி செட்டி தெரு, சென்னை-2) அறிவிக்கின்றனர்.

## வரலாற்றில் தனியிடம் வகிப்பவர் நேரு

### மே. ஜெர்மன் செய்தி ஸ்தாபனம் அறிவிப்பு

பான், நவ. 12—''வரலாற்றில் உயரிய இடம் பெறுபவர் நேரு; இந்த நூற்றாண்டின் மாபெரும் ராஜீயத் தலைவர்களில் ஒருவர்'' என மே. ஜெர்மன் சோஷல் டெமாக்ரடிக் கட்சியின் செய்தி ஸ்தாபனம் அறிவித்துள்ளது. நேருவின் பிறந்த நாள் நவ. 14ல் கொண்டாடப்படுவதை யொட்டி வெளியிடப்பட்டுள்ள விசேஷக் கட்டுரையில் ''இந்திய மக்களின் பால் உலகின் நல்லெண்ணத்தைப் பெற்றுத் தருவதிலும் பொருளாதார அபிவிருத்தி, சமாதான விருப்பம் முதலியவற்றுக்கு உழைப்பதிலும் தனி மனிதரொருவர் வெற்றி பெற்றிருப்பாரானால் அவர்தான் நேரு 40 கோடி மக்களை ஒன்றுபடுத்தும் பிரமாண்டமான பணியில் அவர் ஈடுபட்டுள்ளார். இந்தியாவை ஒரு மதச் சார்பற்ற நாடாக உருவாக்கியுள்ளார். இதன் மூலம் நாட்டுப் பிரிவினைக்குப் பிறகும் 40 லட்சம் முஸ்லீம்கள் அங்கேயே வாழ முடிந்திருக்கிறது'' எனக் கூறப்பட்டுள்ளது.

## சர்வகட்சி விலை உயர்வு எதிர்ப்புக் கமிட்டி

### வில்லிவாக்கத்தில் அமைப்பு

வில்லிவாக்கம், நவ. 11—கம்யூனிஸ்டு கட்சி, திராவிட முன்னேற்றக் கழகம், வில்லிவாக்கம் கிளை செயலாளர்களின் கூட்டு அமைப்பின் பேரில், உணவு விலைவாசி உயர்வு விஷயமாக விவாதிப்பதற்கும், நடவடிக்கை எடுப்பதற்கும், வில்லிவாக்கத்தில் உள்ள பொதுநல மன்றம், முத்தமிழ் மன்றம், கலைவாணர் என். எஸ். கே. நினைவு மன்றம், பைந்தமிழ் மன்றம், திராவிட முன்னேற்றக் கழகம், கம்யூனிஸ்ட் கட்சி பிரதிநிதிகள், கம்யூனிஸ்டு கட்சி அலுவலகத்தில் தோழர் செ. குப்புசாமியின் (பஞ்சாயத்து உறுப்பினர் தி. மு. க) தலைமையில் 13-11-59 மாலையில் கூடினர்.

கம்யூனிஸ்ட் கட்சி சைதாப்பேட்டைத் தாலூகா செயலாளர் தோழர் தே. பிச்சை வந்தவர்களை வரவேற்று, சர்க்காரின் உணவுக் கொள்கையையும், தற்பொழுது உயர்ந்துள்ள விலைவாசிகளின் நிலைமையையும் அதற்கான காரணங்களையும் விளக்கியும், மக்கள் தங்கள் குரலை எழுப்பி நடவடிக்கை எடுக்காவிட்டால் மேலும் மக்கள் அவதிக்குள்ளாவர்கள் என்றும், மாநில, மாவட்ட ரீதியில் ஏற்பட்டுள்ள உணவு விலைவாசி எதிர்ப்புக் கமிட்டி ஏற்பட்டது போல் ஊ தலத்திலும் ஏற்படவேண்டுமென்றும் கூறினார்.

அதன் அடிப்படையில், கீழ்க்கண்ட தோழர்களைக் கொண்ட ''உணவு விலைவாசி உயர்வு எதிர்ப்புக் கமிட்டி'' ஒன்று நிறுவப்பட்டுள்ளது. தோழர் ஓ. ஆர். அரங்கன் (தி. மு. க,) டாக்டர் வி. எஸ். மணிசங்கர் (கம்யூனிஸ்டு) கூட்டு செயலாளர்கள். சாமிக்கண்ணு பொருளாளர் தோழர் சே குப்புசாமி (பஞ்சாயத் உறுப்பினர்) தி. மு. க. இளமதி, கலைஅன்பன், மா. கே. சேகர் (கம்யூனிஸ்ட்டு) இக்கமிட்டி மேற்கொண்டு நடவடிக்கைகளை எடுக்க மீண்டும் 15-1[illegible]9 காலை 11 மணிக்கு கூடுகிறது. (ந. நி.)

## பையன் காணவில்லை

இவன் [illegible] உடைய 15 வயதுள்ள பையன் 14-10-59 பகல் 10 மணி முதல் காணவில்லை. பையன் மாநிறம் ஒல்லியான தேகம், உயரம் சுமார் 4 அடி, லைட் மஞ்சள் கலர் ஸ்லாக்கும், லைட்பொடிக் கலர் புல்பேண்டும் அணிந்திருந்தான். பையனைக் கண்டு பிடித்துக் கொடுப்பவர்களுக்கு தக்க சன்மானம் கொடுக்கப்படும்.

இனியத் நீ வீட்டை விட்டுப் போனது முதல் நம குடும்பத்தார் எல்லோரும் சதா கவலையுடன் இருக்கிறோம். நீ எங்கிருந்தாலும் உடனே புறப்பட்டு வரவும்.

A. S. இமாம் சாயபு,
பர்கூர் ரோடு, அந்தியூர் P. O.
(வயா) ஈரோடு, கோவை Dt.



ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ் கிருஷ்ணசாமி
ஆசிரியர் ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, [illegible] சென்னை-1.
Janasakthi
Broadway, Madras-1.